உ

சிவமயம்.

சிவஞானவள்ளலார்

இருபதுசாத்திரங்களாகத்

திருவாய்மலர்ந்தருளிய

# வள்ளலார்சாத்திரம்.

வேதாந்தசித்தாந்த சமரசமாகிய

இந்நூலை

யாவருக்கு முபயோக மாதும்பொருட்டு

சுத்தப் பதிப்பு.



அத்வைதஞானபோதகராகிய

காஞ்சீபுரம்

## அருணகிரிசுவாமிகள்

பலபிரதிகளைக்கொண்டு ஆராய்ச்சிசெய்வித்த

பிரதிக்கிணங்க,

சென்னை;

மநோன்மணிவிலாசம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

இதன் விலை ரூபா 1 8 0

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## முதலாவது

## சத்தியஞானபோதம்.

### பாயிரம்.

கணபதிகாப்பு.

சூத்திரம்.

பிளிறுமாதங்கப் பிரானடி வணங்குதுங்
கருவியங்கயிற்றைக் கதுமெனத்துமியா
மருவினைப்பாகன் வாயின்மண்ணட்டாக்
கண்மனமறிவில் காமுகர் நுழையா
வல்பகலிரண்டினு மணுகாமுத்தி
நெடுவனம்புக்கு நிலாவுதற்பொருட்டே.

தக்ஷிணாமூர்த்திதுதி.

கல்லாலின்புடை நல்லார்தொழுதெழச்
சின்முத்திரையொடுந் தென்றிசைமூர்த்திடப்
தனாதுமொழியைத் தடக்கையினேந்தி
யனாதிமுத்தன் யானெனவமர்ந்தாங்

சறம்பொருளின்ப மருளியபின்றை
மொழியாமொழியான் முதுவீடளித்த
பெருந்தகைபோற்றுதும் பிறப்பறும்பொருட்டே. (௧)

நூற்சிறப்பு.

சத்தியஞானத் தமிழ்மாலியானை
பன்னிருசமயப் பிணைகளைமுறியாச்
சைவத்தாமரைத் தடத்திடையாழா
நவைதபுமறிஞர் நாமறுகுலவா
வசத்தியபோதக் கவளமருந்தா
குவிவிரிவகன்ற கூடத்திருந்தவே. (உ)

ஐம்புலக்கதவ மடையாதடைத்துப்
பயிலப்பயிலப் பராவமுதாகி
யாகமநூலோர்க் கவிரொளியாகி
யிம்மருனிலத்தி னிடர்கெடப்போந்தன்
சத்தியஞான போதத்தமிழே. (௩)

பாயிரம் - முற்றிற்று.

## பதிபியல்.

உலகமுமுயிரு மொருங்குறப்படைத்தல், வுயிரிடைகடனமோ
வாதுறைற்றினு, மாருயிரறியா வற்புதமென்கொல், லுலகமார்த்தக
ண்ட வெளிகொடறிந்து, முலகமார்த்தாண்ட னுருவறியாவே. (௪)

உவனுவளதுவென் முறைமுச்சுட்டாய்த், தோன்றிநின்றொ
டுங்கும் தொழிலுளவதனாற், பொன்விழுதனைய புரிசடைமுக்கட்,

சிவனுளனவனுற் சீவனுமுண்டா, யறிவினைமறைக்கு மவிச்சைபு முளவே. (௫)

பொன்பலபூணும் மண்பலகடமாய், வருவதுதானே வருதலின்மை, தருபவனொருவன் முனுளனதுபோற், பொன்புரைகடுக்கையம் புண்ணியனுளனே. (௬)

நிரவயனிமலனிராமயனதனை, யொருவிடிலாவியுலவாக்காலம், போலாமாக்கை புணைகைப்பிடியா, யானெனதென்னு மிருஞ்செருக்கடையா, நமர்பிறரென்னு ஞானமிக்குறுமே. (௭)

அகாயனசல னந்தரியாமி, யருளொடுங்கூடிக் கூடாவான்மாத், தீயிரும்பென்னக்கிந்துறுநதியெனத், திருவடிநிழலிற் சேருமன்றே. ()

மலர்மணமனியொளி மன்னியவண்ண, மாவிக்கியல்பு மபிமுகமாதலு, மாகாயம்போலாந்தரங்கண்டாங், கெழுமியெங் கணுமாய்க்கிளரொளிச்சடையனைப், பின்னியொன்றாகிப் பெறுமெனுநூலே. ()

நீரிடையுப்பும் பாரிடையப்புந், தாயிடைச்சூலுந் தளிரிடைத்துவளுந், தீயிடைவெம்மையுஞ்செறிந்தாங்கன்ன, வறிவிடையீசனமர்ந்தாங்குறுமே. (௧0)

அத்துவிதம்பெற வாங்காங்கிருப்பினு, மாருயிரறிவா லறிதரப்படாஅ, வூனக்கண்ணுக் கொளியாதொளித்து, ஞானக்கண்ணின் வெளிப்படுநாதன்.

அவனைக்காணு மறிவன்பாலே, காந்தம்பசாசைக் கவர்ந்தணமான, வொன்றென்றன்னு மூற்றையவ்வூழிப், பிரளயம்வாயிற் பெய்தனவன்றே. (௧௨)

பூவைத்தேடியும் பொருளைத்தேடியுங், காணுளவில் கற்பத்தும்மே. (௧௩)

தரையிதுவென்னைத் தான்கண்டாற்போற், பொருணென்ன வறியாப்புவியே. (கச)

ஒன்றேயிரண்டோ வுபயப்பெருக்கோ, வறிதரப்படாவோகவ யவமிலியை, யாழிவாய்ப்பட் டழிலவணக்குவால், காணுதியாயிற் காணுதிநீயே. (கரு)

அறிவான்போந்த வறிவைவிழுங்கிக், குரைகடல்விழுங்கியூழு ழுணிமானச், செறிவான்சிவனென்த் தேறுதிநீயே. (கசு)

குருட்டுச்சேரியிற் கோடியாதவர்க, ளுலவினும்பேசினு முறங் கினுமென்கொல், புலன்றெறிகாலைப் பொதுவாசிற்பினும், பாடிகாவ லிற் பட்டனவுயிரே. (கஎ)

வியாபகமாதி விரிக்குங்காலே, வியாபகமேவி நிறைவாமென்ப. வியாத்திசமநிறை வாகும்விளம்பின், வியாப்பியமொன்றின் மிடை ந்தநிறைவே. (கஅ)

வியாபகக்கடலே வியாத்தியந்நீரோ, வியாப்பியமுவரெனவிளக் கியநூலே. (கசு)

வியாபகமீசன் வியாத்தியாருயிர், வியாப்பியமலமென வீக்கிய நூலே. (உ0)

வியாபகங்கதிரோ வியாத்திகண்ணே, வியாப்பியமிருளென விதி த்தனநூலே. (உக)

சமட்டிவியட்டி சாற்றுங்காலைச், சமட்டியாகாயர் தனித்தவிய ட்டி, குடவானென்னக் கூறற்பாற்றே. (உஉ)

அமலன்சமட்டி யாருயிர்வியட்டி, யமலனோடொன்றி லாருயிர் சமட்டி, வியட்டியாக்கை விளம்புங்காலே. (உங)

ஐயெரிநாப்பணேர் தவித்திருப்பினு, மிருகாலடக்கி யொருகா னிற்பினுஞ், சேயிழைமாதரைத் தீர்த்தணப்பினு, முடையைத்துறக்

கினு முணவைமறப்பினு, மம்மர்செய்மாயை மழுங்காதம்ம, குரு பரனோக்கிற் குழையுமன்றே. (உ௪)

மாரியைநோக்கும் வனப்புட்போலும், பாரியைநோக்கும் பாவலர்போலுங், கொழுநனைநோக்குங் குலமகள்போலுந், தேசியைநோக்குஞ் சீடன்றெரிவே. (உ௫)

• கட்கிமையொத்துக் காற்றுணைவருடும், பக்குவர்க்கிரங்கிப் பரசிவனுருவத், திருவடியானுந் திருநோக்கானு, மையலகன்ற மறைநூலானும், பாவனையானும் பரிசத்தானும், யோகத்தானு முணர்வாக்கும்மே. (உ௬)

பதியியல் - முற்றிற்று.

---

## பசுவியல்.

கட்டியகட்டோ கருமலக்கட்டு, பூட்டியதளையோ பொன்னா சைத்தளை, யடைத்தவச்சிறையோ வறிவிலாகச்சிறை, யெனிலுயிர்க்கள்வனெக்கணமுயுமே. (௧)

இருவினைமுசலம் யாக்கையுரலே, யதிற்பெய்பண்டம் போலாருயிரே, நிரைநிரைதாக்க நெளிவபுழுங்கி, யடுவான்காலே யல்லற்பட்டு, விடுவான்காலே விம்மிதமுறுமே. (உ)

கொடிவிழியன்ன கொள்கையனாகி, யாசாபாசத் *தார்ப்புண்டன்றே, தன்னைமுன்னிட்டுத் தான்பின்னாகி, மறந்துநினைந்து மதிகதனாகி, யாசம்பேணி யறிவைமறந்தாங், கிச்சைப்புலிவா யிடர்ப்படுமுயிரே. (௩)

ஆணவமாதிய வாப்பையாவி, தானவிழ்க்கறியா தானேயவிழா, காணமொடுக்கிக் கருதியகாலைச், சங்கரனவிழ்க்குந் தனையக்கை யாலே. (௪)

சனுதக்குருட்டுச் சந்ததியிருட்டறை, வாய்ப்பட்டாங்கு மலவாய்ப்பட்டுப், பன்னாளழுங்கிப் பருவரலுழக்கு, மனுநிகேவலத் தாருயிரம்ம. (௫)

கலைமதிசேகரன் கலைக்கையாலே, கட்டவிழ்த்திடலுங் கருவி விற்புக்கிக், கோலங்கொண்ட வாறைக்குறைத்து, ஞாலங்காவலனு னென்னுமுயிரே. (௬)

கருத்தளைபுக்கிக் கண்முணர்த்தோற்று, வாணவப்பாம்பின் வாயகப்பட்ட, சிவத்தேரைச் செந்நெறிகாணப், பன்னூலம்வரல் பசவினியல்பே. (௭)

விந்துமோகினி மானெனவிரிந்த, தத்துவக்காட்டிற் றனித்திடு முயிரை, யாணவவேங்கை யொருபாலடர்ப்ப, மாயைக்குடாவடி யொருபான்மயக்கக், காமியக்கடமா வோறுபாற்கறுவ, விருவினை மலைப்பாம் பொருபாலிழுக்க, வாசையாமண்ணை யொருபாலறையக், குலமெனுஞமலி யொருசார்குரைப்பக், கல்விக்கானியா ரொருசார்க வரச், சமயச்சூறை யொருசார்தாக்க, வவாவெனும்படுதீ யுறிவைக் கொளுவ, மாயாவாத வனசரர்வெருட்ட, வின்னணமாவி யிடருறுங் காலை, புயிரிடையொளிபுக்கிருந்தவொருவரத், தாயினுஞ்சாலத்தயா நிதியிரங்கிக், கட்கடைவாளாற் காடறமாற்றலு; முட்கினயாவு முயிர் பிழைத்தன்றே. (௮)

பசுவியல்-முற்றிற்று.

---

அ இயல் உ-க்கு சூத்திரம்-ருச.

## பாசவியல்.



செயற்கையியற்கை தெரிக்குங்காலே, செயற்கையுயிர்க்குத் திரிமலமென்னில்,* வெண்மடிக்கழுக்கு விரவுந்தன்மை, போலநீங்கிப் புதுவனவதுவே. (க)

*இயற்கையுயிருக் கிருண்மலமென்னி, லிருந்தைகறுப்பு மெழிற்பால்வெண்மையு, மிடையில்விடாதென் றிசைத்தனர்புலவ, ராயினனுதி செயற்கையாமே. (உ)

மலமிலேமாயை மறைக்குமென்னின், மலகுணமறைத்தல் மாயைவிளக்க, லினைபுக்கொடுங்கிய விரவின்வாலுள, தலையிலேயெனுஞ் சொல் சவலைச்சொல்லே. (ங)

மாயாதனுவின் மன்னியவான்மா, கன்மவிருப்பங் கருமலமின்றே, லேயாதொன்றை யிடருமுறுமே. (ச)

கன்மமயக்கக் கருமலமறைப்ப, மாயைவிளக்க வருவனபோவன, மூவகையுயிரு மும்மையவுலகிற், கறங்கெனச்சுழன்று கதிதொறுமடுத்தவே. (ரு)

அவிரொளியிசனை யன்னியமென்று, மிருள்புரியாக்கைமெய்யானெனதென்று, மன்னியமடந்தையை யாருயிரொன்று, முன்னுறச்செய்த வுயிர்மலமேழே. (சு)

குருவைக்கோறல் குருமொழிமறத்தல், குருவைவணங்கக் கூசல்பிழைத்தல், குருப்பொருள் கவர்தல் மாயைக்கூறே. (எ)

செருவினுழைத்த றிமலத்தழுத்தன், முக்காரணத்தொடு முச்சிடநூக்கல், செருக்கிகழ்கூறல் சிற்றினமருவல், குலப்பாராட்டல் கன்மக்கூறே. (அ)

நிச்சயமறவி நீடஞ்ஞானம், விகற்பத்தீமை விரோதத்துஞ்ச வழிபொருள்வேட்ட லல்வழிச்சேறல், பொய்ம்மொழிகூறல் புணர்ந்தவைவெறுத்த, லெனைநிகரில்லை யான்பரமென்ன, லச்சமிலாமை யாணவக்கூறே. (௯)

ஈட்டலிரத்த லிழுக்கையியற்றல், வேட்டல்வெறுத்தல் வீதிவழிச்சேற, லறிவைமறுத்த லாகம்பேண, லோதியவெட்டு மூயிர்க்குணமென்ப. (௧௦)

அவாவறலீத லானவைகுயிற்றல், விருப்பறன்மகிழ்தல் வீதிநெறியகற, லறிவைநினைத்த லாகமொறுத்தல், பன்னியவெட்டும் பதிகுணமென்ப. (௧௧)

மூதுரைவியத்தல் மொய்மலர்தணத்த, லடியரைக்காணி லகமுடைந்தழுதல், சில்லோர்குழுவைத் தீதெனத்தேறத, லருச்சனைகணக்க மன்பிவையேழும், பிறவாக்காலைப் பிணாந்தெழுகுறியே. ()

பசுநூலோதல் பழிமலங்கவர்தல், சான்றோர்க்கலக்கஞ் சாலவிளைத்தல், புல்லினஞ்சேர்தல் புகர்த்தொழில்புரிதல், கயவர்வணங்கல் கண்மனமேழும், பிறப்புழிமன்றப் பெருகுறுங்குறியே (௧௩)

அருளொனுமலைமக ளவனொாடுங்கலத்தல், முழுதுணர்ஞானமுழுவதுமுடைமை, முழுதனுக்கிரக முழுப்பரிபூரணை, மறுநிழுத்தனவயவமிலாமை யவிகாரக்குறி யாற்கெண்குணமே. (௧௪)

அரிசநிவெருக்க மடலர்ச்சனையொடு, வணக்கம்பரவுயிர்க் கன்பகமதிநூல், பெருந்துறையெங்கு நிறைபொருள்பேண, லருளினைக்கூட்ட மடுபவநடுக்க, மன்றகுணமெட்டு மடியர்க்கமைத்தவே. (௧௫)

கதிரிடைக்கலந்த கண்ணொளியொப்ப, வைவகையவத்தை யான்மாநீங்கிச் சிவத்தொடுங்கலந்த தேற்றமென்ப. (௧௬)

நோக்கநோக்கை நோக்கநோக்க, நோக்காநோக்க நோக்கு மன்றே. (கஎ)

பாசப்பகுப்பும் பஞ்சவிந்தியமு, மந்தக்கரணமு மைவகைப் புலனு, நீங்கநீங்கி னிறையிருள்கடந்த, பரையொடுமளாவிப் பரை நிலைகடந்த, வறிவொடுங்கலந்த வான்மாப்பாச, சாலங்கடக்கு மென்னுஞ்சைவமே. (கஅ)

சேதனமான்மாவசேதனஞ்சீவஞ், சேதனமான்மாவறிவைமறைபா, சேதனச்சிவனைச்சேர்தரிலாவி. சேதனனன்றிச்சித்தாபாசனே.

கருவிக்கான்மாக் கர்த்தாகருது, மறிவுக்கானே யாயிற்கர்த்தா, கருவினையருளாற் கழற்றியவாவி, யருளாய்நிற்கில வனிவனுமே. ()

சடத்திரணிப்பத் தனித்திடுமான்மாச், சோகம்பாவனை தொக்கியபின்னறைக். கருடனை நினைப்பான் கடுக்கழன்றன்ன, வுபாதிநீங்கி புணர்வாயினவே. (உக)

அறிவறியாமை யகலாதகன்ற, வறிவேசிவமெனுமாகமமுடிவே.

கண்கதிர்பண்டங் கழியிருள்கிரணம், விளக்கெனுமாறு நிரை நிரைவிளக்குது. முயிரேயிறைவனவனுலுறுபொரு, ளதனைமறைக்கு மாணவமதனைத், தணக்கவந்த தண்ணருளதனை, யறிவான்வந்த வாக்கையொடாறே. (உ௩)

இருவினையொப்பா லிருண்மலபாகம், மலபாகத்தின் மருவும் பாதம், பாதப்பதிவாற் பயிலுங்குரவன், குரவன்வரலுங் கொடும்பவமேழுந் தனித்தனியோடித் தலைகெட்டன்றே. (உச)

பாசவியல்-முற்றிற்று.

---

ஆக இயல் ௩-க்கு சூத்திரம் ௫௮.

## உபதேசவியல்.



ஊனுயிர்வேற்றை யுரைக்குங்காலை, யென்மாடென்மனை யென்பான்போல, வென்காலென்கை யென்பனவேறே, யுருத்தேனிளைத்தே னெனும்பன்மொழியா, னவயவமான்மா வாகுமென்னிற், சின்னாளின்றதேய்ந்தறமாய்தலி, னவயவமான்மாவன் றெனவுணரே

ஐம்புலனறிதலி னவத்தைப்படுதலி, லுணராக்கால முடல்சவமாதலி, னருத்தாபத்தியி னுலுளனான்மா. (௨)

பிறத்தலுமிறத்தலும் பெருகலுஞ்சுருங்கலும், போதலும்வருதலும் புணர்வுநீக்கமு, மன்னமயத்துக் கடுத்தனவாதலி, னன்னமயகோச மான்மாவன்றே. (௩)

ஒருமரத்திற்பே யுண்டிலையென்ன, லைசீகம்மற வாக்கையகத்தே, யான்மாவுளவென் றறைந்தனநூலே. (௪)

கோசமுடலமு கோசமான்மா, விவ்வியலங்காய நிரவயமான்மா, வாதிகாய மனுதியான்மா. (௫)

பொய்ம்மைசடல மெய்ம்மைபுருடன், சொற்பிரமேயந் தோன்றியயாக்கை, யப்பிரமேய மான்மாவன்றே. (௬)

ஐம்புலவேட ராற்றலைமறந்து, காணமென்னுங் கடிகுரன்ஞா... ஞூழ்தரப்போதத் தனிவிற்பிடித்திட், டிரக்கமின்றியவியிசைக்குயிற் றிப்,பிறவியங்கானிற் பேதுறுங்காலைச், சிவநரபாலன் றிருவுளத்திரங்கிச், சிவவேடு நீக்கித்தேற்றித், தன்னருள்காட்டித் தானாக்கும்மே.

இருவினையீட்டி யீட்டாவியல்புங், கருவியிற்றோய்ந்துந் தோயாக்கலப்புஞ், சிவனலனுகியுஞ் சிவனாந்தாமுங், காட்டியீட்டவ கருணைக்கையே. (௭)

சிவனியலுணு யென்னுந்திகழ்வுஞ், சிவனுனே னென்னுந்திற முஞ், சிவனேயாவினு முளனெனுந்திருவுஞ், சிவனேகாட்டித் தெளித்தனனெனக்கே. (க)

தசகாரியத்தைச் சாற்றுங்காலைத், தத்துவம்யாவும் சடமெனக் காண்டல், தனித்தனிச்செயலைத் தானறிந்திடுதல், விமைமலநாமல மென்னத்தணத்த, றத்துவரூபந் தத்துவதெரிசனந், தத்துவசுத்தி யிவைகடானே. (கo)

அறிவாகரனு னெனவறிந்துணர்தல், செறிபரப்பிரமம் யானெ னத்தேற, லறைசிவனருளி லடங்காதடங்க, லுருவதெரிசனஞ் சத் தியுமுயிர்க்கே. (கக)

சுகமயமீசன் சொரூபங்காண்ட, லச்சுகமயனே யாங்காங்கறித, லவனேதானு யச்சுகத்தழுந்த, லிவனவனுகி யின்பமேலிடுத லுருவந் தெரிசனம் யோகம்போகமே. (கஉ)

உயிருபலக்கலி லுணர்பானுப்படின், பஞ்சவிந்திரியப் பன்னி றங்கவரா, துணரொளியாகி முபலங்கவர்தலி, னெஞ்ஞேயாமென் றுணர்தற்பாற்றே. (கங)

தாடலைபொன்றரன் றன்னேடொன்றய்க், கண்ணுங்கதிருங் கலந்ததோற்ற, மன்னமோக்கத் தமர்வனவுயிரே. (கச)

சந்திரியிறந்துஞ் சந்திரனிறவாத், தன்மைச்சீலஞ் சிவனவன் பாலே, யேயுமண்ணு வென்மனுர்புலவர். (கரு)

கன்னன்கௌந்தி புத்திரகதைபோற், சீவன்சிவத்தாற்சீவ நீங்கி, மாசறுதிங்கண் மண்டிலம்போன்றுங், கீவாவிற்றொருமதி சயம்பெறுமே. (கசு)

கூன்மதிச்சடிலக் குன்றவிற்குளவி, மூலதியாத மீலர்வாய்ப் பட்ட, சீடக்கீடந்திசைமுகனறியா, முடியாவின்பமுடிபெற்றனவே.

புலிமுதனுத கிறெனப்பொலிந்த, தத்துவசாலுங் கடப்பான் கடந்திட், டறிவறியாமை யாங்காங்ககன்று, ரருளொடுங்கூடி யரன் பாலொன்று, யருளையுமறந்தபின் னறியகிலேனே. (கஅ)

ஆலம்பன்னிறெனவனிராலம்பன், சுதந்தரமிலியிவனவன் சுதந்தரனே. சரீரியிவன சரீரியவனெனு, மலநீக்கத்தி லிஃதுவழக்கின்றே.

அஞ்செழுத்துண்மை யறையுங்காலே, சிவாயநமவெனுந் திருவாக்கியத்திற், சிவமருளான்மா திரோதைமலமிவை, பாந்தளைகிலியாப் பருவிடம்போன்றச், சின்றனைமறையாச் சீவனையறைக்கு, மதோமுகமாகி லறிவைமயக்கு, மூர்த்தமுகத்தி லுருவழிந்தனவே.()

அருளம்பலத்தி லருளுருவாகிச், சிகாரம்பிரமந் திரைமலநீங்கி, பகாரவுயிர்தன் னடியிணைசேர்வான், திருநடஞ்செய்யுந் திருத்தில்லைக்கணே (உக)

உபதேசவியல் - முற்றிற்று.

ஆ இயல சு-க்கு சூத்திரம்-எசு.

---

## அணைந்தோரியல்.

### முதற்காண்டம்.

நஞ்சமிழ்பகுவாய் நாகத்தணன், றேனவிழ்கமலச் சேவடிநீழன் மலவெயிற்கொதுங்கி மதிநலம்பெற்றோ, ராணுத்தன்மை யறைகுதுமெடுத்தே (க)

வேழமயின்ற வெள்ளிலக்கனியோ, வழல்வாய்ப்பட்ட வாடைகொல்லோ, வாய்முலையையா மாய்ந்தவான்கன்றோ, நனையவிழ்கொன்றை நாதனதருளா, லகூக்காழற்ற வடியவர்மாண்பே. (உ)

மணிப்பாம்பிருளை மழவாயிழையைச், செல்வன்சிறுமையைத் தீயன்குறிரை, யாக்கனிரக்கை யறியாப்போன்று, மாதேவன்கழல் மன்னியவுயிரு. மறியாபிறப்பி னவத்தைப்பெருக்கே. (ங)

ஊனமைகனிவு மூழ்கின்வரவு, மாழ்கிநிலையு மகல்வானிறைவும், பன்னியுளமும் பதிதர்மயக்கு, மலநிலையகன்ற மாதவர்வரம்பு, மியம்பதற்படா வென்மனார்புலவர். (௪)

இரக்கமும்வணக்கமு மிறந்தவவாவு, மிணங்காதவரோ டிணங்காவிணக்கமுஞ், செம்மலாலயந்தொறுஞ் செல்லுந்திறமு, மும்மலமகன்ற முத்தர்பாலுளவே. (௫)

பூரணபோதப் பொருடானாகலி, னாரணமாக மமவர்க்கென்செயவே. (௬)

நினைப்புமறப்பு நீத்தமையாலே, யனைத்துங்கண்டுங் கண்டிலரன்றே. (௭)

பதியெனிற்பாசத் தோடுளையென்றும், பசுவெனின்முத்திப் படுதலுமின்றே. (௮)

சூனியபாச மாண்டுழிச்சோதி, நானதுவென்னு ஞானமுமின்றே. (௯)

ஐவகைஞானத் தந்தரவான்மா, வாங்கவையிறப்பி னதுபரமான்மா (௧௰)

மாயைமயக்குங் கன்மவழக்கு, மூலமலத்தின் முடிவின்மறைப்புஞ், சுயம்பிரகாசர்க் கிலையெனுஞ்சொல்லே. (௧௧)

முன்னலுமுரைத்தலு முறுதொழிலுஞற்றலு, மாவிக்கிலைபொறியறிவொடுமொய்தலி, னாக்கைமாட்டென் றறைந்தனர்புலவர். (௧௨)

சிதம்பரமாதலிற் சேர்விடமில்லை, யவனிவனாதலி னணுகலுமில்லை, யறிவுருவாதலி னாக்கையுமின்றே. (௧௩)

ஒன்றேயாதலி னுணர்பவனின்று, நானதுவாதலின் ஞானமுமின்றே. (௧௪)

சேர்வினமறிந்து சேர்வானொத்த, பன்னகபூடணன் பாதப்புணையா, லீந்தாக்கடலை நீந்திப்போந்தனர் தானாய்நின்ற தனிவான்கரையே. (௧௫)

சத்தஞ்சோதிடந் தருக்கங்காவியங், கொக்குவழ்பேரதங்கோதெ னத்தள்ளாப், பித்தர்க்கிந்நூல் பேசிற்பிழையே. (௧௬)

பிறவிக்கடலைப் பிணிநிடமுன்னூற், புணைதாவென்னப் பொருமியிரந்து, பன்னாட்கேட்கும் பக்குவநோக்கி, யன்னோர்க்கிந்நூலறையலுமாமே. (௧௭)

கோறல்வெகுளல் குறைகொள்குணத்தன், றிருவருளில்லோன் செகமுகனையன், வழிபாடில்லோன் மந்தனிவர்க்கிங், கிந்நூலறைவி னேழைக்குருவே. (௧௮)

ஆவிக்குரிய வறநூல்புகன்றபின், சத்தஞ்சோதிடந் தருக்கம் புகன்றவன், சுவர்க்கம்புகுத்தித் துயருறுநிரையப், பதிபுகுவிக்கும் படிறனன்றே. (௧௯)

நிறாதிசமின்றி நுண்ணுணர்வாகி, யனாதிமுத்தனருளியவாகமந், தந்திரகலையெனச் சாற்றலுமாமே. (௨௦)

மனாதிகளொடுக்கி மறைமுடிவுணர்ந்து, வழிபடன்மந்திர கலையெனமதியே. (௨௧)

அறியாவறிவ னருளிற்கலந்தாங், காதவனொளிபுக் கழுந்திய கண்ணாய், மும்மைப்பாழு முறைமுறைகடவா, வபாவப்பாழி னடங்காதடங்க, லுபதேசக்கலை யிஃதெனவுணரே. (௨௨)

கேவலஞானக் கிழவனாளுடைப், பிள்ளைநாவரசு பேராரூர, னாதனவாக்கிய னருந்தமிழ்மூலன், சீவன்முத்தர் திருவாய்மலர்ந்த, நூல்பவநோய்க்கு ணண்ணியமருந்தே. (௨௩)

முதற்காண்டம் - முற்றிற்று.

---

ஆக சூத்திரம்-௧௦௨.

---

நனாதிகம் - நனாதிகமெனமுதற்குறை.

## இரண்டாங்காண்டம்.



உடலெனும்பெண்ணை யுயிரெனுநாயக, னென்னாள்விடுவனெவ் வழியானே, விடுவதில்லை, விதியுள்ளளவும், விதிவசமின்றேல் வெ றுப்புற்றிடுமே, வெறுப்பும்விதியின் மேம்பாடாமே, யறிஞரிடத்து மற்றவரிடத்து, மாக்கைவெறுப்பு மகங்காரவாணியு, முறுமெனக்கண் டாங் கொழிந்திடுமோணு. (௧)

ஈசனென்பேர் ணெவ்வணமவன்யா, ருலகமீன்ற வொருவனு மாயி, னுங்கவனெங்குள னுலயத்துள்ளா, னுலயம்புகினு மவனைக் காணே, னுமரூப நட்டமாதலி, னீசனைக்காணேனென்செய்கேனே.

நீரிடையிருப்ப னிலத்திடையிருப்பன், காற்றிடையிருப்பன் கனலிடையிருப்பன், விண்ணிடையிருப்பன் வெயிலிடையிருப்பன், மதியிடையிருப்பன் மனத்திடையிருப்பன், றதியிடைநெய்போற் சங் கரன்றானே. (௩)

டருவோவருவோ வுபயப்பெருக்கோ, காணும்பொருளோ கா ணுப்பொருளோ, கரியோசெய்யோ கைகாலுண்டோ, வுண்பதுமுற க்கமு முடையுமுண்டோ, கண்டவருண்டோ கழறுமினீரே. (௪)

அதிதிதன்மைந்த ரலமருகாலைப், பிரமகீதையைப் பேசினனெ வனோ, சிதாகாயத்திற் றிருவுருத்தாங்கி, மறலியைமுனிந்தவரதனெ வனோ, வரன்முறையுலகம் வயின்வயினுதிக்க, நான்முகத்திருந்து நான்மறையுரைத்தன், றுபனிடதத்திலொளித்தவனெவனோவவனே பிரமமென்றறிமன்னே. (௫)

மூலமென்றழைத்த முனைக்கொம்பியானை, வருத்தந்தீர்ப்பான் வந்தனெவனோ, தூணிலுமிருப்பன் றுரும்பிலுமிருப்பன், எனுமழ சொல்லுக் கெதிர்ந்தவனெவனோ, துகிலுரிகாலைத் துருவதன்மகட்கு,

மாளாத்துகிலே வருத்தினனெவனோ, வருச்சுனற்காகிவமரிடையிருந்தாய், குணர்மெய்ஞ்ஞான முரைத்தவனெவனோ, வவனேபிரமமென்றறிமன்னே. (௬)

கல்லாலின்கீழ்க் கடவுளாகிப், பொல்லாஞானம் புரிந்தவனெவனோ, மால்வரைவில்லாய் வலியவர்புரங்க, ணீரெழுவொருக்கி நின்றமூவரைச், சேவடிநீழலிற் சேர்த்தவனெவனோ, காலனைமாட்டிக் கவின்சிறுபாலன், மாணந்தவிர்ப்பான் வந்தவனெவனோ, வவனேபிரம மென்றறிமன்னே. (எ)

உளனோபிரம முயிரோபிரமம், வானோபிரம மறையோபிரம, நானோபிரம நாடுங்காலே. (அ)

வடிவோபிரம மதியோபிரம, மொலியோபிரம முணர்வோபிரம, மறிவோபிரம மாயுங்காலே. (௯)

ஒருமலவழக்கு மிருவினைத்தொடரு, மும்மலச்செருக்கு நால்வகைவாக்கு, மைவகைப்பொறியு மறுவகைக்குற்றமு, மற்றுலன்றியறிவாகாயே. (௧0)

கண்ணொளிகண்ணே கதிரொளிகதிரே, கண்ணாகாதே கதிருங்கண்ணுங், கதிராகாதே கலப்பின்வைப்பே. (௧௧)

வானோவெளியோ மறுகனல்புனலோ, மண்ணோமதியோ வளரொன்றாமோ, யானோபரம்பொரு ளொட்டும்பிரிவே, தானேயதுவே யதுதானென்ப, மானுதனுவும் வழக்கச்சொல்லே, நானேயதுவென காடுமாமே. (௧௨)

இரண்டாங்காண்டம் - முற்றிற்று.

சத்தியஞானபோதம்-முற்றிற்று.

அடி இயல் ௫-க்கு சூத்திரம்-௧௧௪.

---

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## இரண்டாவது

## பதிபசுபாசவிளக்கம்.

### பாயிரம்.

### விநாயகர்துதி.

விருத்தம்.

சித்தகக்கோயிலிலிருக்குஞ்செல்வனை
மத்தகக்கரிமுகத்தரசைவல்லபைப்
புத்தரவல்குலிற்புழைக்கைபோக்கியுஞ்
சத்துமாலிலாதவன்றன்னைப்போற்றுவாம்.

### நடேசர்துதி.

வேறு.

முன்னைநான்மறைமுடியினில்வீற்றிருப்பவனை
யன்னையத்தனுயுலகெலாமமர்த்திடுபவனை
யென்னையாளுடையிறைவனையிருண்மலங்கழியப்
பொன்னினம்பலத்தாடியபுனிதனைத்தொழுவாம், (௧)

## பரைவணக்கம்.

வேறு.

மூவர்க்குமுதற்பொருளாய்முத்தொழிற்கும்வித்தாகி
நாவிற்குமனத்திற்குநாடரியபேரறிவாய்த்
தேவர்க்குமுனிவர்க்குஞ்சித்தர்க்குநாகர்க்கும்
யாவர்க்குந்தாயாகுமெழிற்பரையைவணங்குவாம்.

## கணபதிவணக்கம்

நீங்காதமலமென்னுநீண்டமூக்குடைத்தும்பி
யாங்காரமெனுந்தறியையடியோடெம்பறித்தோடத்
தாங்காதவொருகோடிசூரியர்கடோற்றநிக
ரோங்காரக்கயமுனியையுளக்கூடத்திருத்துவாம்.

## சுப்பிரமணியர்வணக்கம்.

வேறு.

அறுவிதசமயத்தோர்க்குமறுமுகசாமியாகிச்
செறிபரப்பிரமம்நானேயென்றுசின்மயிலிலேறிக்
குறுமுனிக்கருளிச்சீவக்குகைதொறும்வீற்றிருந்த
மறுவிலாக்குகனைப்போற்றிமாய்த்தனென்பிறவியெல்லாம்.

## தக்ஷிணாமூர்த்திவணக்கம்.

வேறு.

வீராதனத்திலெழுந்தருளிமின்னிற்சிறந்தவேணியராய்த்
தீராவையந்தீர்த்தருளுஞ்சின்முத்திரைச்செங்கையினராய்ப்
பாரோர்விண்ணோர்பணிந்தேத்தப்பரமகுருவாய்ப்பலகாலு
மோராலின்கீழமர்ந்தாரையுள்ளும்புறம்புவணங்குவாம்.

வேறு.

மூலமாயெவைக்கு மறிவொணுவுருவாய் மும்மலங்களைந்தவர்க் கெ.ரிதா, யாலபோசனஞ்செய் தழிவிலாதவனுயருமறைச் சிரத்தொ பிர்பவனைய்ப், பூலலோசனனுய்ப் பசுதொறும்பதியாய்ப் பக்குவச் சனகனுதியர்க்கா, யாலமர்நீழ லமர்ந்துறைபவனை யகத்தவிசிருத்தி யின்படைவாம். (சு)

## குருவணக்கம்.

வேறு.

பாசமைந்தையுந்தனித்தனிப்பரிந்திடநீக்கி
நேசமாகியவறிவுருநீயெனக்காட்டிப்
பேசுமேழ்வகைப்பிறப்புனக்கிலையெனப்பேசித்
தாசுநீக்கியசுயம்பிரகாசனைத்தொழுவாம். (எ)

வேறு.

தாரணியவர்க்குநாலாஞ்சத்தினிபாதமெய்த
ஆருணிபோலத்தோன்றியொருமொழியாலெனக்குக்
கோரணிகாட்டுமாறுசமயத்தின்கோளைநீக்கிப்
பூரணசொரூபங்காட்டும்புண்ணியன்பொலந்தாள்போற்றி.

## திருமூலர்வணக்கம்.

வேறு.

ஐயமாகடலாழ்ந்தவுயிர்க்கெலாங்
கையிலாமலகம்மெனக்காட்டுவான்
மையறீர்திருமந்திரஞ்செப்பிய
செய்யபொற்றிருமூலனைச்சிந்திப்பாம். (க)

## வியாசமுனிவணக்கம்

துக்கசாகரத் துக்கொருதோணியாய்ப்
பக்குவச்சுகனைப்பெறுபாக்கிய
தக்கவான்மத யாபராணுகிய
மிக்கவேதவியாதனைப்போற்றுவாம். (க0)

## நூற்சிறப்பு.

வேறு.

பாவமகலப்பரிகாரவிதத்தைப்பகருஞ்சிலநூல்க
ளாவலோடுமறம்வளரவறங்கள்பகருஞ்சிலநூல்க
ளேவமில்லாமுத்தியினுமிரண்டேயென்னுஞ்சிலநூல்கள்
சீவபிரமவயிக்கியத்தைச்செப்புமிந்நூற்சித்தாந்தம். (கக)

வேறு.

புன்னூலாம்பரசமயப்பொய்நூலின்மயங்குவரோ
சென்னூலாமருமறையின்சிரத்தொளிருமுபநிடத
நன்னூலிநெறிநின்றநயமுணர்ந்தநாதாக்க
ளொந்நூலுங்கைவிட்டேயிந்நூலைப்பற்றுவார். (கஉ)

## அவையடக்கம்.

அங்கணநீரிழுக்குடையதாணுலுநதிகலக்கி
லங்கணநீரென்றிகழாரதுபோலென்புன்சொல்லும்
புங்கமறையொடுகலக்கிற்புன்சொலுநன்சொல்லாகும்
புங்கமலிசான்றோரும்புன்சொலிதென்றிகழாரே. (கங)

## நூற்பெயர்.

வேறு.

பொய்ப்புவியதனிலுளும்பொருக்கெனத்தோன்றிமாயு
மெய்ப்பிலாவுயிர்கட்கெல்லாமெளிதினின்ஞானமெய்த
வப்பணிச்சடையோன்முன்னரறைந்தவாகமத்திற்சொல்லு
முப்பொருள்விளக்கஞ்சொல்வேன்முக்கணனருளைக்கொண்டே. ()

பாயிரம்-முற்றிற்று.

---

## குருகாருண்ணியம்.

### வேறு.

உலகமுமாமையுமொண்கண்மாதரு
நிலையலவென்றுணர்நெடியமாணவன்
கலையெலாந்தெரிந்தவன்கதிவிருப்பின
னலமலிகுரவனைநாடித்தேடுவான். (க)

### வேறு.

உலகநெருப்பைக்கடந்தொழியாஞானவுததிமடுப்பேனோ
விலகுகுடும்பத்துயர்நீங்கியெந்நாட்டுறவியாவேனோ
திலகமறையின்பொருளிதெனத்தேற்றுங்குரவன்காண்பேனோ
கலகவுடலப்பிணிதணந்துகடவுடனையான்காண்பேனோ. (உ)

### வேறு.

மருவியவுடல்வெறுப்பும்வையகவெறுப்பும்வந்தா
லிருவினையொப்புமங்கணைய்திடுமெய்துங்காலைக்
கருமலபாகமுண்டாம்பாகத்தாற்கடிதிற்சேருந்
திருவருட்சத்திபாதஞ்செறிந்திடுங்குருவுமன்றே. (௩)

### வேறு.

இனையவண்ணநினைந்திரங்குமெழின்மாணக்கன்றனைப்புரப்ப
நினையுநினைவிலொளித்திருந்தநிமலனீங்காக்கருணையினன்
மனிதன்போன்றேயுண்டுடுத்தன்மருவிக்குருவாய்வரச்சீடன்
கனியுஞானக்கண்ணூரக்கண்டான்பவநோய்விண்டானே. (௪)

தேனுண்டளிகள்பண்பாடுஞ்செறிகற்பகநேர்குருந்தடிக்கீழ்
மானுமழுவுஞ்சதுர்ப்புயமுமணிக்கந்தரமுமறைத்தருளி
யீனமகன்றதிருவாதவூரர்க்காகவெழுந்தருளு
ஞானமுனியேயிவனென்றுதெளிந்துநாவாற்பழிச்சினனே. (௫)

வேறு.

அப்பிரமேயபோற்றியாருயிர்த்துணைவாபோற்றி
யொப்பிலாவொருவபோற்றியுணர்பவர்க்கணியாபோற்றி
நட்பயலில்லோட்போற்றிநாதநாதாந்தபோற்றிச்
சுப்பிரமணியாபோற்றிச்சுயம்பிரகாசபோற்றி. (௬)

அற்புதவமலவேகவசிந்திதவகண்டாகார
நற்சிதம்பரவேகாந்தஞானநாதாந்தவின்ப
சொற்பிரகாசசுத்தசூனியதுரியாதீத
தற்பரவனந்தானந்தசற்குருநாதாபோற்றி. (௭)

கண்ணிலாக்குழவிவெய்யகாரிருட்டறைபட்டங்குத்
திண்ணியமலவறைக்குட்சிக்கியசிறியேன்றன்னை
நண்ணருஞானக்கையானான்முகன்முதலோரேங்கத்
தண்ணளியாலெடுத்தசற்குருநாதாபோற்றி. (௮)

மூத்தரைப்பகைவரென்றுமூர்க்கரையுறவரென்றும்
பெத்தனாயனேககாலம்பிறந்திறந்தெய்த்திட்டேற்குப்
பத்தியான்ஞானங்காட்டிஞானத்தாற்பரனைக்காட்டும்
சத்தியஞானானந்தசற்குருநாதாபோற்றி. (௯)

பொச்சையாமுடலங்காட்டிப்பொறிபுலன்கரணங்காட்டி
யிச்சையாருயிருங்காட்டியெழிற்றிருவருளுங்காட்டி
யச்சமினிலையங்காட்டியகம்புறந்தானாய்க்காட்டி
சச்சிதானந்தங்காட்டுசற்குருநாதாபோற்றி. (௧௦)

குருகிருண்ணியம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௪.

---

## குருபதேசம்.

அஞ்சினேன்பவத்துக்கென்னை யாளெனவடியில்வீழ்ந்த
வஞ்சமில்சீடன்றன்னை வாவெனவருகில்வைத்துத்
துஞ்சிருள்கிழியப்பாததாமரைசிரத்திற்சூட்டி
யஞ்செழுத்தருளிப்பின்னர தன்பொருளறையலுற்றான். (௧)

வேறு.

அஞ்செழுத்தினிலொருபுடையரும்பதியமரும்
வஞ்சமுற்றவொருபுடைபாசமாய்வதியுந்
துஞ்சலின்றியவொருபுடைபசுவெனத்துலங்கு
மஞ்செழுத்தினின்மும்முதலறிந்தவர்பிறவார். (௨)

வேறு.

பானுவாமிறையெழுத்துவதனொளிபரையெழுத்து
வூனமில்கண்ணேயாகுமுயிரெனுந்தனியெழுத்துத்
தீனமில்விளக்கேயாகுஞ்செப்பியதிரையெழுத்து
நானெனுமிருளேயாகுநவையுறுமலவெழுத்தே. (௩)

நகரமாகியசேரியைநஞ்செனவெறுத்து
மகரமாகியமயலெலாம்வேரொடுங்களைந்து
வகரமாகியவனத்தினிலிருந்திளைப்பாறிச்
சிகரமாகியநகரியையடைந்தனன்சீவன். (௪)

பாசமாகியவிரண்டையும்படிறெனத்தள்ளி
நேசமாகியவிரண்டையுநெஞ்சிடையழுத்திக்
காசநீங்கியகண்ணெனமுத்தியைக்காண்பா
யாசைநீங்கியநிலையிதுவிதற்கிலையையம். (௫

குருபதேசம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௨௬.

## தசகாரியம்.

தரைமுதனாதமீறாய்த்தனித்தனிக்காண்டல்ரூபந்
தரைமுதனாதமீறாய்த்தற்செயல்காண்டல்காட்சித்
தரைமுதனாதமீறாய்ச்சடமயமென்றுகண்டு
குருபரனருளானீங்கல்சுத்திபாய்க்குறித்துக்கொள்ளே. (௧)

தத்துவாதீதந்தன்னிற்சகசிவாணவமலந்தா
னுற்றிடுதற்குச்சாக்கிராவெனவுயிர்க்குரூபஞ்
சித்துருநானேயென்றுதேறலேதெரிசனந்தான்
முற்றணீசன்முன்னர்முகிழ்த்திடாதடங்கல்சுத்தி. (௨)

எங்கணுஞ்சிவனுளானென்றுணர்தலேயிறைவன்ரூப
மங்கவன்றொழிலெங்கணுமறிதலேதெரிசனந்தான்
றிங்கள்வேணியனோடொன்றல்சிவயோகமலர்மணம்போற்
புங்கநேயத்தழுந்தல்போகமென்றறையுநூலே. (௩)

தசகாரியம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨.

---

## நின்மலசாக்கிரம்.

காய்கதிரவிமுன்னர்க்கண்செயலடைந்தாற்போலத்
தூய்மனக்குரவனோக்காற்றுகளறுபோதநீங்கிப்
பாய்பசுகரணமெல்லாம்பதிகரணங்களாகிப்
பேய்பிடியுண்டோன்பாலன்பித்தன்போலொழுகுவானே. (௧)

நின்மலசாக்கிரம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௩.

---

## நின்மலசொப்பனம்.



வேறு.

ஐம்பொறியாலைம்புலன்களாரூத்தான்புசித்தாலுமறிவான்மிக்கோ
ரும்பர்பிரான்றிருவடிக்கீழுள்ளத்தைவைத்தங்கேயுறங்காநிற்பர்
நம்பனைநீத்தொருசோரநாயகனைவிரும்புற்றநாரிவேண்டு [றே.
மன்பவன்றன்பாற்கிடக்குமாக்கையிவன்பாற்கிடக்குமதுபோலன்

வேறு.

காண்பதுங்கேட்பதுங்கருத்துஞ்சொப்பனம்
பூண்பதும்புனைவதும்புசிப்புஞ்சொப்பனஞ்
சேண்படுநாகமுஞ்செகமுஞ்சொப்பனம்
வீண்படுமிவைக்கெலாம்விசுத்தஞனரோ.

நின்மலசொப்பனம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௨௫.



## நின்மலசுழுத்தி.



வழுத்துசாக்கிரசொப்பனமருவிடுகாறுஞ்
சுழுத்திவந்துறுமற்றையச்சுழுத்திவந்துற்றால்
விழுத்தசாக்கிரசொப்பனமேவிடாததுபோன்
முழுத்தபூரணசுழுத்தியுமுற்றுந்தன்றே. (௧)

குடும்பபாரமுஞானமுங்கொண்டவனின்பு
மடங்கநீத்துயரறிவினையடைந்தவனின்பு

நடந்துறங்குவோனின்பமுநாண்மலர்ப்பாயல்
கிடந்துறங்குவோனின்பமுமானுமேகிளக்கில். (௨)

நின்மலசுழுத்தி-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௩௭.

---

## நின்மலதுரியம்.

வேறு.

முப்புரமென்பதிவ்வவத்தைமூன்றையு
மிப்புரமூன்றிலுமிருந்திடர்ப்படா
கப்புமுப்புரத்தையுங்கடந்தசீவனே
செப்புறுதுரியனாய்ச்சீவன்முத்தனாம்.

வேறு.

மண்ணொடுமண்ணார்போனார் வளியொடுவளியார்போனார்
தண்ணொடுதண்ணார்போனார் தழலொடுதழலார்போனார்
விண்ணொடுவிண்ணார்போனார் விளங்கறிவுருவாய்நின்ற
நுண்ணியநானேயெங்குநுழைந்திடாதிருக்கின்றேனே.

நின்மலதுரியம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௩௯.

---

## நின்மலதுரியாதீதம்.

இந்நிலைதுரியயாகுமென்றருமறைகள்கூறு
மிந்நிலைநின்றேறுமென்னுமெண்ணமுங்கடந்துபோன
வர்நிலைதுரியாதீதமாகுமென்றறைவர்நல்லோ
ரந்நிலைதனக்குமேலோர்நிலையிலையறையுங்காலை.

வேறு.

போக்கிலைவரவிலைபுணரக்கையிலை
தாக்கிலையேக்கிலைசரிக்கக்காலிலை
மோக்குறமூக்கிலைமுகிழ்க்கக்கண்ணிலை
வாக்கிலைமனமிலையதீதவாழ்விலே. (௨)

வேறு.

நீரிடைமூழ்கினோனிறையவுண்டவன்
வாரமிருமதன்போன்றுமாமய
றீர்சிவபோகத்திற்றிளைத்திருப்பர்க
ளாரவர்பெருமையையளக்கற்பாலரோ. (௩)

வேறு.

இத்துரியாதீதத்திலிமைக்கொட்டுமளவானாலு
முற்றகண்ணாடிதன்னிலுழுந்துருள்பொழுதானாலுங்
கைத்தலத்தாலாவின்பால்கறக்குறுங்காலமேனுஞ்
சித்துருவாகிநிற்போர்சின்மயவீடுகாண்பார். (௪)

நிர்மலதுரியாதீதம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௩.

---

## பதிவிளக்கம்



நிராமயமாய்நிட்களமாய்நித்தியமாய்நின்மலமாய்ப்
புராதனமாய்சஞ்சலமாய்ப்பூரணமாய்ப்புனிதமாய்ச்
சராசரமாய்ச்சாக்ஷியாய்ச்சத்தியமாய்ச்சித்துருவாய்
பராபரமாய்வெறுவெளியாயிருக்குமந்தப்பரமசிவம். (௧)

சொல்லாலுமனனாலுந்தொடாததூக்குமமாய்ப்
பல்லான்றகேள்வியருமீதென்றுபகர்வரிதா
யொல்லாதபரஞ்சுடராயுயிர்க்குயிராயுண்மையா
யெல்லாமாயல்லவுமாயிருக்குமந்தப்பரமசிவம் (உ)

ஒன்றாயும்பலவாயுமுருவாயுமருவாயுங்
குன்றாயுமணுவாயுங்குணமாயுங்குணியாயு
நன்றாயுந்தீதாயுநானாயுந்தானாயு
நின்றாயுமுளதாயுமிருக்குமந்தப்பரமசிவம். (௩)

வேறு.

சிவனறிந்தருளுவன்சீவராசியைச்
சிவன்றனையறிந்திடாச்சீவராசிகள்
சிவனிலாவிடமிலைசெடசித்தெங்கணுஞ்
சிவனிலாவிடிலுயிர்செகமற்றில்லையே. (௪)

அவனவளதுவெனுமகிலபாசமே
யவனவளதுவெனவுறைபவன்பசு
வவனவளதுவினையாக்குவான்பதி
யவனவளதுவறிலறிவைக்காணலாம். (௫)

அவனசைந்திடிலொருவணுவசைந்திடு
மவனசையாவிடிலணுவசைந்திடா
சிவன்சத்தியோடுநிற்செகம்விரிந்திடுஞ்
சிவன்றனித்திடில்விரிசெகமொடுங்குமால். (௬)

மன்னுமாலயனொடுவானும்வையமும்
பின்னமுமபின்னமும்பேசுஞ்சீவனும்
பன்னுமாணவமுதற்பாசம்யாவையு
முன்னுமீச்சிவத்திடையுதித்தொடுங்குமால். (௭)

வேறு.

பதியறிவாகுமத்தைப்பகுத்தறிவதுவேசீவ
னிதுவதுவோவென்றுன்னற்கிடமேதுபாசமாகு
மதுவிதுவெனுஞ்சுட்டற்றலறிவறிவாகிநிற்கு
மதுவிரிகொன்றைத்தாரான்மலரடிகாணலாமே. (௮)

பதிபசுபாசமூன்றும்பகுத்தறிந்தவரேமுத்தர்
பதியொன்றும்பற்றாதாகும்பசுவொன்றைப்பற்றிநிற்கும்
பதிமுகந்தெரியாவண்ணமறைப்பதுபாசமாகும்
பதிகுருவானஞான்றுநீங்குமப்பாசந்தானே. (௯)

கண்பலபொருளைப்பற்றிக்கதிரினையிழந்துநிற்குங்
கண்பலபொருளைப்பற்றாதாயிடிற்கதிரைக்கூடும்
புண்புலன்பற்றியாவிபுனிதனைப்பிரிந்துநிற்கும்
புண்புலன்பற்றாதாயிற்புனிதனைச்சேருமன்றே. (௧௰)

பளிங்கியமாவனாகும்பகலவனிறைவனாகும்
பளிங்கினிற்பஞ்சவன்னம்பார்க்கிலைம்புலன்களாகும்
பளிங்கினில்வன்னம்பற்றும்பகலவன்பக்கஞ்சாரிற்
பளிங்கினில்வன்னம்பற்றாவுச்சியிற்பானுவந்தால். (௧௧)

செம்புயிராகுமந்தச்செம்பினிற்களிம்புபாசஞ்
செம்பினிற்களிம்புபோனாற்செம்பொனாமாறுபோல
நம்பனார்ஞானத்தாலேநானெனுமலம்போய்போனா
னம்பனாரிவனென்றுநான்மறைசொல்லுமன்றே. (௧௨)

சாக்கிரசொப்பனங்களிரண்டையுந்தாண்டிப்போனாற்
றுக்கமாஞ்சுழுத்திவந்துதொல்லிருளாகிமூடு
மாக்கமுமழிவுமில்லாவறிவினாலதுவும்போனாற்
போக்கொடுவரவுமில்லாப்பூரணப்பொருள்வந்தெய்தும். (௧௩)

காணுறுபுலன்கள்போகிற்கரிசுறமனம்போம்போனு
லாணவம்போகும்போனாலாருயிர்ப்போதம்போகுஞ்
சேணுறுமொளிக்குமேலாஞ்சிவப்பிரகாசந்தோன்றும்
மாணனையிதுவேமுத்திநிலையெனமதித்திடாயே. (௧௪)

மன்னையுமறந்து நிக்கவனசரவடிவமாகித்
தன்னையுமறந்திருந்ததனயனைப்போன்றுநீயு
மென்னையுமறந்தைம்போதவெயினர்தம்வடிவமாகி
யுன்னையுமறந்தாய்நீயென்னுருவெனவுணர்ந்துகொள்ளே. ()

ப ' ஙகினில்வன்னமபற்றும்பகலவன்பக்கஞ்சாரிற்
பவி ஙகினில்வன்னம்பற்றாபகலவனுச்சிசாரில்
விளங்குயிரிறையைக்காணுவேலையிற்புலன்கள்பறறும
விளங்குயிரிறையைக்காணும்வேலையிர்புலன்பற்றவே. (௧௬)

வேறு.

இறவறியாமையைபகன்றவாருயி
ரறிவறியாதபேரருளைக்கூடிடிற்
பிறிவறியாதவெம்பிரானுட்கொணடுபோய்ப்
பிறிவறியாவகைக்கும்பின்னையே. (௧௭)

வேறு

மாசறப்படித்தானேனுமயலறத்தெளிந்தானேனு
மாசறத்துறந்தானேனுமஞ்செழுத்துணர்ந்தானேனு
மீசன்வேறியான்வேறென்னுமிருமையுங்கழலானாகிற்
பாசமுங்கழல்வதின்றாம்பதித்துவந்தானுமின்றே. (௧௮)

தத்துவமுப்பத்தாறுந்தனித்தனிகளைந்துநீக்கின்
மொய்த்திருண்மூடுமத்தைமுன்னவனருளால்வீட்டின்

மெய்த்தலுன் னுருவாகன்றாய்விளங்குறமதற்கப்பாலே
சுத்தமெய்ஞ்ஞானமேனிச்சோதிதானாயிருப்பன். (௧௯)

வேறுவேறாகியோடும்விரிநதிக்குலங்களெல்லாங்
கூறுமுன்னீரிதென்றாங்கொள்கையதாகுமாபோல்
வேறுவேறாகிநின்றவிதிவழிச்சமயமெல்லாங்
கூறுமுத்தியினிலொன்றாங்கொள்கையதாகுமன்றே. (௨0)

பதிவிளக்கம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௯.

## பசுவிளக்கம்.

பாசத்தாற்பசுவெனப்பகரப்பட்டன
பாசந்தானிரிதரப்பதியெனப்படுங்
காசத்தாற்குருடெனக்கழறப்பட்டன
காசந்தானிரிதரக்கண்ணெனப்படும். (௧)

ஐம்பொறிவனத்திடையாவிவேடனார்
வம்புறுபோதவில்வளைத்துமாழ்குறந்
துன்பெனுங்கணையினைத்தொடுத்துமெல்லநின்
றின்பெனுமறியினையிரியவெய்யுமால். (௨)

வேறு.

எண்ணரியவான்யாக்கை யிலக்கணங்கூறுங்காலிருண்மலத்தான்
மூடராயிறந்துபிறந்துழல்வார்,புண்ணியத்தாற்பாவத்தாற்புண்ணிய
பாவத்தாற் பொன்னுநரகுதரை போக்குவாவுடையார்; நண்ணிய

விஞ்ஞானகலர் பிரளயாகலர்க ளவில்சகல ரொன்றிரண்டு மூன்று மலமுடையார், தண்ணிலவுமதிமுடியா ரருளுதயகாலஞ் சாங்குசித்த ராய்மலத்தைத் தணந்துசிவமாவார். (௩)

எல்லாமுநானேகா ணென்னை விடவேறில்லை யெனுமலத்தாலார்ப் புண்டிங் கேர்திழைபொன்பூமி, யில்லதுபொருளொல்லா நிலையென வேகருதி நின்மலனைத்தனை வினையை நினையாதுமயக்கும், பொல் லாதபுலன்வழியிற் றிரிந்துதடுமாறிப் புகழிகழானல்வினையுந் தீவினை யும்பொருந்தி, பொல்லாதயோனிதொறும் பிறந்துபிறந்திறப்பா ருமைபாகனருள்கிடைக்கி லிரண்டினையுமொழிப்பார். (௪)

வேறு.

அன்பனைவிட்டுமற்றோரவலனைவிரும்பிப்பின்னர்
துன்புறுவார்கள்போலச்சுயம்பிரகாசனாகு
நம்பனைவிட்டுப்பொல்லாஞாலத்தைவிரும்பிப்பின்னர்
துன்புறுவார்களிந்தத்துயரினுக்கொழிவுமுண்டோ. (௫)

வேறு,

ஆவாவென்னவாச்சரியமரியஞானந்தனைநீத்திட்
டோவாமாயாமோகிதராயுணராக்கனவினிலைபோன்று
மூவாக்கும்பப்பாழ்நிரையந்தன்னின்மூழ்கிமூர்ச்சித்துப்
பாவவயத்தாற்பாவங்களீட்டியதையேபண்ணுவார். (௬)

வேறு.

எஞ்ஞான்றுக்கும்பபாரமேகுமென்றிரங்கல்வேண்டா
மஞ்ஞானமெம்மட்டுண்டோவம்மட்டுக்கும்பபார
மெய்ஞ்ஞானமுண்டேல்முத்திமேவுதற்கையமில்லை
சஞ்ஞானத்தாலஞ்ஞானஞ்சுருங்குமந்நிலையேமுத்தி. (௭)

வேறு.

உண்ணலுறங்கல்பற்றல்விடலுலகந்தழுவல்வரல்போத
லெண்ணுமிவைகளான்மாவுக்கியற்கையென்னிலிவனுக்கிங்
கெண்ணில்கோடிபிறவியினுமிடும்பைக்குடும்பந்தனினின்று
பண்ணற்கரியபரமபதமோக்கமில்லைபகருங்கால். (அ)

வேறு.

சீவனுமிந்தவான்மாவியற்கையைத்தெரிக்குங்காலைக்
கேவலன்சுத்தன்சாந்தன்சூக்குமன்கிளர்சனாதன்
பாவமில்சர்வாணந்தன்பகருஞ்சர்வசாக்கி
மேவுசின்மாத்திரத்தன்மிகுசுகசொரூபனுமால். (௯)

வேறு.

யாதாமொருவனிவ்வண்ணமிலகுமான்மசொரூபத்தைப்
பேதமாகவறியுமவன்பேசினன்மலபகாரி
யோதுசோரனெலந்தப்பாவமுமுற்றப்பட்டில்லை
வேதமெல்லாமுறையிடினுந்தெளியாரையமேலிட்டோர். (௧௦)

வேறு.

புண்ணியபூமியிற்பிறந்தும்பூசுரப்
பண்ணவனுகியுமங்கைபாரியுங்
கண்ணியகுடும்பமாங்கடலைநீந்திடான்
றிண்ணியபிரமபகாரிதேறிடே. (௧௧)

வேறு.

லையானுமுயற்சியினுமவிழ்ந்தபோராதரவாலுங
காகனகத்தாட்ருகுரவன்பாற்குறைவறுபத்தியினும்
மாகமேனிளைக்கும்பிரகிருதியின்றன்பாவனையுழுமுதையுந்தணிந்திட்
டகமாஞ்சிவனோநானெனச்சிந்தித்திடவொழிந்திருந்திடத்தகுமால்,

வேறு.

முரசதிர்தானைவேந்தர்முன்னர்நீநானென்றேதி
லரசனுமிகச்சினந்தேயாக்கினைபலவுஞ்செய்வன்
விரைசெறிகொன்றைமாலேவேந்தன்முன்னீநானென்னிற்
றிருவுளமகிழ்வனென்றாலியாரிதைத்தெளியவில்லார். (௧௩)

வேறு.

யாவனொருவன்றன்னிடத்திலிருக்குஞ்சிவனைவிட்டயலே
மேவியிருக்குஞ்சிவனைநனிபூசிப்பவன்றன்வியன்கையிற்
பாவியிருக்கும்பாயசத்தைவிட்டுக்கூன்கைபரந்தோடித்
தாவுந்துனியைநாடுனியாற்றுய்க்குமவனேசொல்லுங்கால். (௧௪)

வேறு.

சகலபூதங்கடோறஞ்சாக்கியாய்விசுத்ததேசாய்த்
தகுஞானதேகியாகித்தங்கியபரமான்மாவை
யகமுகமாகவுள்ளும்புறம்புமொன்றாயறிந்து
பகவறயாவன்பார்ப்பானுங்கவன்முழுதும்பார்த்தான். (௧௫)

வேறு.

ஆக்கைமேவிமேவானுயணுவாய்மகத்தாய்விபுவாகிச்
சூக்கவுருவாய்வியாபகனாய்சொலுமானந்தசொரூபனாய்
வீக்குநாசரகிதனாய்விளங்குஞ்சிவனையுள்ளபடி
நோக்கியறிந்துதிரானோனொய்தாஞ்சோகமடையானால். (௧௬)

வேறு.

வான்வர்தமக்குநீங்காமயறருபேதவேது
வானவஞ்ஞானஞானவலியினேற்சிதைந்தபின்னர்
தீனமார்சீவனென்றுஞ்சிவனென்றுமில்பேதத்தை
யீனமார்புந்தியாலேயெவன்பண்ணப்படுவான்கொல்லோ. (௧௭)

### வேறு.

ஆன்மாசுத்தன்சதாநித்தனழியாவின்பச்சுகசொருப
னான்மாசெஞ்சொற்பிரகாசனஞ்ஞானத்தாலசுத்தனைப்போ
லான்மாதோன்றப்படுகின்றானருவமாகிநிரவயமா
மான்மாஞானத்தாற்சுத்தனாகிவிளங்கப்படுகின்றான். (௧௮)

யாவனொருவனஞ்ஞானச்சேற்றைஞானவிரும்புனலா
லாவக்கழுவுவானவனேயொளிசேரமலசதாசுத்தன்
றாவுகருமதற்பரனாய்த்தபனனெழுமுன்றரியானா
யாவலோடுங்கங்கைமுதற்படிந்தானேனுமசுத்தனே. (௧௯)

ஞானநீராற்சுத்தனாய்நண்ணுங்கிருதகிருத்தியனாய்
ஞானவானாயமர்ந்திருக்கும்யோகிக்கிந்தஞாலத்தி
லானகருமமணுவேனுமில்லையுண்டுபோற்றோன்றின்
ஞானந்தன்னையுள்ளபடியறிந்தஞானியலனவனே. (௨௦)

### வேறு.

பாவமில்பரமாத்துமஞானர்க்கு
மூவகையுலகத்தினுமொய்ம்பினா
லாவதோர்பயனொன்றிலையாங்கவர்
சீவன்முத்தரெனச்செப்பும்வேதமே. (௨௧)

ஞானமென்னுமோர்நல்லதீர்த்தத்தைநீத்
தீனமாயையினிச்சையிழுதையோர்
தீனமார்க்கும்பக்கடல்சிக்கியே
பூனமாய்ச்சுழன்றேயுழல்வார்களே. (௨௨)

யாவனாயினுமியாதோர்பொழுதினி
லாவிஞானவமுதச்சுவையினை
யாவலோடுமருந்தினனாயிடில்
யாவையும்விட்டதனையேயெய்துவான். (௨௩)

அரியஞானவமுதச்சுவையைநீத்
திரியுமைம்புலவின்பங்கடுய்ப்பனே
லரியஞானவமுதச்சுவையைமுன்
பருகப்பட்டவனன்றுபகரிலே. (உச)

பண்டிதரிந்தப்பாரைமுழுதையுந்
தொண்டிஞன்மசொரூபத்தறிவர்கள்
மண்டஞ்ஞானமறைப்புண்டவரஃ
தண்டிச்சங்கரனையறியார்களே. (உரு)

வேறு.

அசரீரியாய்மகத்தாயமர்ந்துளவமலவான் மா
வசைசுகமருவானுகிமாண்டுறகிலேசனுகி
யின்சபிரசனனுன்மாவாயிருந்திடப்படுமன்றேனைப்
பசையறுஞானவானுன்முத்தனென்றுரைக்கற்பாலார். (உசு)

ஆகையாற்றேகிகட்கேயளவறுதுயரமெல்லா
மூகவஞ்ஞானத்தின்கண்மூலமாயிருக்குமன்றே
யேகஞானத்தஞ்ஞானமிறக்குமற்றியற்றலோவாச்
சோககன்மத்தஞ்ஞானஞ்சுருங்குமோசுருங்கிடாவால். (உஎ)

ஞானத்தைத்தவிரப்பாவக்குழாங்களைநாசஞ்செய்யு
ஞானம்வேறில்லையிந்தஞானம்போனலனென்றில்லை
ஞானசாதகத்தையன்றிநவையுறுகுடும்பம்போக்கு
ஞானசாதனம்வேறில்லைநன்னெறியறிமாணுக்கா. (உஅ)

பாதகமனைத்துநீங்கும்பக்குவசித்தத்தார்க்கு
மேதகுஞானத்தின்கண்விருப்பமும்வியப்புமுண்டாம்
பாதகத்தாற்கட்டுண்டபதிதசித்தத்தார்க்கெல்லா
மேதகுஞானவார்த்தைகிடைக்குமோவிளம்புங்காலே. (உகூ)

வேறு.

ஆன்மாசித்தன்சருவபரிபூரணனரியகூடத்த
ஞன்மாதோடமிலியேகனுகியிருந்தும்பிராந்தியினு
லான்மாபின்னம்போற்றேன்றப்படுவனரியஞானத்தா
லான்மாபின்னம்போற்றேன்றப்படானெனன்றறைந்தானமலாபு

வேறு.

ஒருவனுக்கிப்பிறப்பிலுரியதோர்
பரமவான்மசொரூபம்பகவற
விரவுமேலவன்மேலாம்பராபர
வரியமுத்தியடையப்படுவனல். (கக)

எந்தயோகிக்கெப்போதுமனதிலே
யுந்துஞானவொளியசைதன்னிய
மிந்தஞாலமெங்கெங்கும்விளங்குமேற்
சந்தமுத்திதானுயேவிளங்குமால். (கஉ)

எப்போதுதன்சொரூபமெதார்த்தமா
யொப்பநோக்கியுலகங்களியாவையுங்
கப்புமாயாமயமெனக்காண்பனே
லப்போதேயச்சுகவடிவாயினுன். (கக)

எப்போதுந்தன்னிடத்திற்சருவமுந்
தப்பலின்றியேதான்சருவத்திலு
நுட்பஞானநோக்கானேக்குவானெனி
லப்போதேயப்பிரமமடைவனல். (க௪)

எப்போதியாதாமொருவனுக்கிப்பவ
வெய்ப்புலாம்பிணிக்கேகமூலிக்ஞையாம்
பெட்பின்மேலாம்பிரமஞானம்பெறி
லப்பொழுதிவனேசிவனுயினுன். (கரு)

## வேறு.

செந்தழல்விளக்கதுசிறியதாயினு
மந்தகாரத்தினையகற்றுமாறுபோற்
சிந்தலில்ஞானமுஞ்சிறியதாயினு
மந்தமில்பாவங்களனைத்தும்போக்குமால். (௩௬)

ஒளிவளர்பெருநெருப்புலர்ந்தகாட்டமுந்
தளிர்பசுங்காட்டமுந்தகிக்கும்பான்மைபோ
னளிர்மதியனையவோர்ஞானவங்கியுங்
களவிருவினையையுங்கணத்தில்வாட்டுமால். (௩௭)

மந்திரம்வல்லவன்வலியபாம்பொடு
தொந்தனையாயினும்விடந்தொடப்படா
னிந்தியப்பாம்பொடுவிணங்கிற்பினு
நந்தியஞானியுநவைதொடப்படான். (௩௮)

அம்புயபத்திரமறலின்மூழ்கியும்
பைம்புனலாலொருபந்தமின்மைபோ
னம்பனையகத்தவிருத்துஞானியு
மைம்புலன்மூழ்கியுமார்ப்புறுவரோ. (௩௯)

## வேறு.

மருந்தினன்மந்திரத்தான்மன்னுயிர்ச்செருக்கும்பொல்லா
வருந்தியவிடநசிக்கப்படுதல்போலமலயோகம்
பொருந்தியஞானிகட்குப் பொருவில்பாவங்களெல்லாந்
திருந்தொருகணத்திறக்குந்தீர்பவமுடையமீரே. (௪0)

## வேறு.

வேதமெய்ம்மொழிகண்டுவிமலரா
யாதியாண்மலையுறிஞானியை
நோதகச்சொலித்தடிக்குமொய்யவ
ரேதமாநரகுக்கிரையாவரே. (௪௧).

வேறு.

ஞானியேபுருடோத்தமனாதலால்
வானநாடரும்வந்தணங்குவர்
ரேனைநாடருமேவலினிற்பர்காண்
ஞானிபூச்சியமென்பதற்கையமோ. (௪௨)

வேறு.

துல்லியமொழிந்தானேனுந் துல்லியமுடையானேனுங்
கல்வியில்மூர்க்கனேனுங்கற்றுணர்பெரியோனேனு
மொல்கலில்ஞானயோகப்பயிற்சியையுடையோனனு
னல்லவனவனேயார்க்கும்பூச்சியநாடுங்காலே. (௪௩)

வேறு.

பேதாபேதமகன்றொழிந்தமாணவின்னும்பேசக்கேள்
யாதாமொருவன்கிருகத்தைஞானியெய்தப்பெறிலவன்றன்
மூதாதையராம்பிதிர்க்குழுக்கண்முத்தியடையப்படுவோமென்
றோதாமகிழ்ச்சியொடுநடனமுஞற்றுநிற்பரொழியாதே. (௪௪)

வேறு.

தவறறவெவன்மனந்தத்துவத்திலே
பவமகலனுபவப்பரியந்தஞ்செலி
னவன்விழியெதிர்ப்படுமனுக்களியாவரும்
பவமெல்லாநசித்துயர்பதத்தைச்சேர்வரால். (௪௫)

வேறு.

மாசகல்மாணனேமகிமைதங்கிய
தேசுணர்ஞானிகடெரிசனத்தினால்
வேசரிநீங்கியேவீரவும்விண்ணுளோர்
வாசவன்பதத்தையேபெறுவர்மண்ணுளார். (௪௬)

வேறு.

பாலன்மாதிதனையெப்பெற்றுமற்றொன்றைப்பற்றலேபோ
லேலவிம்மனிதரெல்லாமீசனுக்கீசனானை
மேலானல்வினையினாலேஞானியையமேவப்பெற்றுஞ்
சாலமோகத்தானீத்துச்சஞ்சரிப்பிரர்களந்தோ. (சஎ)

வேறு.

ஓகோவிந்தமாயையமயலொழியாதிருக்குமானிடர்கள்
வாகார்பரமார்த்தத்தெரிசியானமகிபர்தமைநீத்துத்
தாகாரிதத்தும்பொருட்டிலகில்யாதாமொருவர்சரிக்கின்று
ராகாவவரேயமுதத்தைவிட்டுவிடத்தையருந்துவோர். (சஅ)

பசுவிளக்கம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ககக.

---

## பாசவிளக்கம்.

முதலாவது

## ஆணவவிலக்கணம்.

ஆணவமலமான்மாவுக்கனாதியிலியற்கையென்னின்
மாணவசங்கின்வெள்ளைபோலொருகாலுமாயா
வாணவமலமான்மாவுக்கனாதியிற்செயற்கையென்னிற்
காணும்வெண்மடிக்கழுக்குக்கலத்தல்போற்பினும்வக்தெய்தும். (க)

வேறு.

சரிதையிலாணவக்கால்சரிந்திடின்
கிரியையிலனைமலக்கெடுகியுற்றிடு

மருவுயோகத்தின்முக்கான்மடிந்திடும்
விரிசிவஞானத்தின்முற்றும்வீயுமே. (௨)

வேறு.

வீணுரைக்கரும்பமீசன்மெய்யுரைவேம்புமாக்குந்
தாணுவையிறைஞ்சவொட்டாதையலையிறைஞ்சப்பண்ணு
நாணறவிரத்தல்செய்புநல்லுவர்க்கீதல்செய்யா
வாணவமலத்தின்செய்தியிவ்வணமறிந்துகொள்ளே. (௩)

நெல்லினுக்குமிபுஞ்செம்பினீடுகாளிதமும்போலத்
தொல்லைதொட்டின்றுகாறுமுயிரிடைத்தொக்கிநிற்கும்
வல்லியேயூர்பங்கநாசான்வடிவெடுத்தருளுங்காலம்
புல்லுறுபனிபோற்பொன்றம்போதவாதவனெழுங்கால். (௪)

ஆணவவிலக்கணம் - முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௧௫.

---

## இரண்டாவது
## மாயையிலக்கணம்.

---

மாயையேயுடலமாகுமாயையேகரணமாகு
மாயையேபுவனமாகுமாயையேபோகமாகு
மாயையேபொறிகளாகுமாயையேபுலன்களாகு
மாயையேயண்டபிண்டம்யாவையுமாயையாமே. (௧)

சாயைபோலொத்தவாழ்வைமெய்யெனச்சந்தோடிக்குந்
தூயமெய்ஞ்ஞானவாழ்வைப்பொய்யெனத்துடித்துட்கு
மாயவன்பிரமனீசன்யாரையுமயக்கஞ்செய்யுங்
காயமேமாயையாலியாரிதைக்கடக்கவல்லார். (௨)

வேறு.

காமத்தாலிந்திரன்கலக்கமெய்திஞன்
காமத்தாலிராவணன்கருத்தழிந்தனன்
காமத்தாற்கீசகன்தவலையுற்றனன்
காமத்தாலிறந்தவர்கணக்கிலார்களே. (௯)

கோபத்தாற்கௌசிகன்றவத்தைக்கொட்டிஞன்
கோபத்தானகுடனுங்கோலமாற்றிஞன்
கோபத்தாலிந்திரன்குலிசம்போக்கிஞன்
கோபத்தாலிறந்தவர்கோடிகோடியே. (௪)

கோபமேபிறவியைக்கொடுக்குங்கொள்கையாங்
கோபமேயறிவினைக்குறைக்குங்குட்டநோய்
கோபமேதாயையுங்கொல்லுந்திண்படை
கோபமேதவத்தினைக்குலைக்கும்பேயரோ. (௫)

ஆசையாற்சந்திரனங்கந்தேய்ந்தனன்
ஆசையாற்சவுபரியறிவைநீங்கிஞன்
ஆசையானராசுரஞவிபோக்கிஞன்
ஆசையால்வாலியுமழிந்துபோயிஞன். (௬)

வேறு.

ஆசையாலிந்தமாயையறிவினைமுழுதுமூடித்
தேகமேயான்மாவென்றுஞ் சேயிழைமடவார்தங்கள்
போகமேமோக்கமென்றும்புந்தியைத்திரிவுபண்ணுஞ்
சோகம்பாவனையர்வித்தைத்தொலைப்பர்கள்சீவன்முத்தர். (௭)

மாயையிலக்கணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨௨.

---

## மூன்றாவது
## கன்மவிலக்கணம்.



வினையினால்விகாரமுண்டாம்விகாரத்தால்விருப்புண்டாகு
முனைவுறும்விருப்பினாலுவிதவுலகங்களுண்டா
நனிபுலகத்தான்மெல்லநாளெனுயுகமுண்டாகுந்
துனிவுடையகங்காரத்தாற்றுஞ்சலும்பிறப்புமுண்டாம். (க)

ஊழ்வினையாலுடம்புமுடம்பினாலூழுமாகித்
தாழ்வினையிரண்டாய்மூன்றாய்ச்சதுர்விதமாகியோங்கி
வாழ்வொடுவறுமையாகிமன்னுயிர்தொறும்வதிந்து
காழ்மரம்விதையும்போலாங்கன்மநீகண்டுகொள்ளே. (உ)

சஞ்சிதந்திருநோக்காற்போம்பிராரத்தந்தனுவோடேகும்
விஞ்சுமாகாமியந்தான்விளங்குஞானத்தினாற்போஞ்
செஞ்சயான்செய்ததெல்லாஞ்சிவன்செய்ததென்றுணர்ந்தால்
மஞ்சனேவினைத்திறங்கள்வந்துனைச்சந்தியாவே (௩)

இம்மலமூன்றுலாவியிருளடைந்தறிவுமாழ்கி
மும்மைசேருள்புவனந்தோறுமுறைமுறைபோகிமீளுஞ்
செம்மலர்க்கருணைவள்ளற்றிருவருட்டிரோதைமாறி
மம்மர்கொள்பாம்புமிழ்ந்தமதியெனவிளங்குமன்றே. (௪)

பாசவிளக்கம்-முற்றிற்று.*

ஆக திருவிருத்தம் - கஉ௩.

---

## ஞானதீக்கையிலக்கணம்.

பூசையால்விரதந்தன்றாற்புண்ணியதீர்த்தந்தன்றா
லாசறுதருமந்தன்றால்லவறுவேள்விதன்றாற்
பாசபந்தங்கள்பொன்றாபாரிடைநம்போல்வந்த
தேசிகனருளுஞானதீக்கையாற்பொன்றுமன்றே. (௧)

வேறு.

அண்டமெலாம்வலம்புரிந்தானறுமுகவன் கரிமுகவ னறிவாலாய்ந்திட், டெண்டிசைக்குஞ் சிவனிறைவன் சிவனையல்லா துலகுயிருமில்லையென்றே, மண்டியவன் பாலெழுந்து வலம்புரிந்தான்மகிழ்ந்திறைமாங்கனியளித்தான், கண்டவிருவகையாலுங் கன்மபலஞானபலங்காணலாமே. (௨)

ஞானதீக்கையிலக்கணம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௨௮.

---

## ஆசாரியனிலக்கணம்.

சீலகாருணியம்பாசவைராக்யஞ்சீர்பிறங்கி
யோவிலாவீசன்பத்தியொளிவளர்பிரமஞானந்
தாவியநான்குந்தானேகுரவற்குச்சடலமென்னுஞ்
சாவதும்பிறப்புமில்லாச்சங்கரனாகமங்கள் (௧)

வேறு.

மண்ணலைநீரலைவளிநெருப்பலை
விண்ணலைமதியலைவிரிந்தபானலை
பெண்ணலையாணலைபேடுமல்லையா
லண்ணலேநீயெனவறைபவன்குரு. (௨)

வேறு.

சிவத்துவம்சிசிவோகமத்துமிசிவோயமத்தி
நவத்துதிவாக்கியத்தைநவையறசீடற்கோதி
யவற்றுறுபொருளைத்தேற்றியாங்கவன்கிலேசம்போக்கிப்
பவத்துயர்நசித்தான்றன்னைப்பரமவாசிரியனென்ப. (௩)

யானெனதெனுஞ்செருக்கையிரித்தொளியாயெறிக்கு
ஞானிதேசிகற்குத்தன்னை*நதிர்கொடுத்திறைஞ்சாநின்ற
வானமாணுக்கற்கிந்தவனுபவமறையலாகு
மேனையோர்க்குரைப்பினன்னோனிருள்புரைநிரையத்தெய்தும். (௪)

வேறு.

சீடன்றன்பவநோய்க்குத்தேசிகன்வாய்மொழிமருந்தா
மாடகமாமலையேறியானந்தமடைந்தான்போ
ஞடரியவுயர்முத்தன்ஞானத்தாலடைந்தோரை
வீடுபுகக்குடியேற்றும்வித்தகனுமிவனுமால். (௫)

ஆசாரியனிலக்கணம் - முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௧௩௩.

---

சீடனிலக்கணம்.

பூதகாரியங்களெல்லாம்பொய்ம்மைமெய்ப்பூதநாத
ஞதலாற்புவனத்தாசையசுரத்தாசையற்ப
மோதறவகைச்சம்பத்துமுயர்முத்திவிருப்புமிந்தச்
சாதனநான்குந்தானேசீடற்குச்சடலமென்ப. (௧)

---

* நதிர்-திசைச்சொல்.

வேறு.

ஞாலனிவனமையாளவந்திடும்
பரசிவனைத்தினம்பணியத்தக்கவ
னிருவினையாழியையெளிதினீந்துவான்
றிருமலிமுத்தியைச்சேருந்திண்ணியன். (௨)

வேறு.

கடப்பருங்கடல்கடத்துங்கருணையாரியன்முனிந்தே
யடித்துதைத்தருவருத்திட்டக்கிரமஞ்செய்தாலு
முடற்பிணியகற்றவல்லவுத்தமனிவனென்று
திடப்படுசிரத்தையுள்ளோன்சீடனென்றுரைக்கும்வேதம். (௩)

மன்னர்முன்காலன்முன்னுமகிழ்ச்சியைப்பிரிக்கவந்த
தன்னிகர்நோயின்முன்னுந்தானடங்கிடுவார்போல
பின்னமர்கயிலைநீத்துமெய்யுடையார்போல்வந்த
கொன்னமர்குரவன்முன்னரடங்குவான்குலமாணாக்கன். (௪)

குருவிலான்பெற்றஞானக்குமரியைக்குமரிகூடி
மருவியவின்பமொக்குமண்ணிடைநம்போல்வந்த
குருவினாற்பெற்றஞானக்குமரியைக்குமரன்கூடி
மருவியவின்பமொக்குமென்பர்நன்மதியுளாரே. (௫)

முந்துநூலுழைப்புமின்றிமுத்தர்பாலிணக்குமின்றிச்
சுந்தரக்குரவன்பாதத்தொழும்புகள்சிறிதுமின்றி
யந்தமில்ஞானம்வேண்டுமவாவெலாங்கொழுநற்கொன்று
சந்ததிவேண்டிநோற்குந்தன்மையோடொக்குமன்றே. (௬)

வேறு.

முன்புறுவானிரவெல்லாமுப்போதும்பணிந்தெழுவான்
பின்புறுவான்பகலெல்லாம்பெட்புறுவானெப்போதும்

கொன்புனைந்தவுரைகொள்ளான்குறிக்கொள்வான்றிருமொழியை
யன்புடையமாணுக்கர்களவில்குறியுண்டாமால். (எ)

வேறு

நானுர்கொல்லோவென்றனக்குநாதனுர்கொல்லோவெணக்கிங்
கானப்பிறப்புமிறப்புமிவணடைந்ததென்கொலோவென்று
தானேதனக்கிவ்விசாரங்கடலைப்பட்டிடலுந்தேசிகனைத்
தேறுரணிபோற்றேயமெனாந்தேடிமவனேசற்சீடன். (அ)

சீடனிலக்கணம்-முற்றிற்று.

ஆ" திருவிருத்தம் - கசக.

---

# ஞானகுருமான்மியம்.

பிதிர்க்கடம்பூசையாவும்பேசிடிற்பாசதன்மம்
பதுப்பொழிற்றடாகமாதிபுகல்பசுதன்மமாகு
முதுக்குறையறிஞர்பூசைமுப்புரதகனன்பூசை
துதிர்கருமாசான்பூசைசொலிற்சிவதருமமன்றே. (க)

வேறு.

எங்கானிருப்பினுமிறப்பதுநிச்சயம்
பொன்னுட்டிலிந்திரனுயினும்பொன்றுவ
னன்னீட்கழியுமுன்ஞானத்தினலே
தன்னலறிவதுசற்குருபாதமே. (உ)

சித்தஞ்சிவத்தோடொருக்கிச்சிவமான
முத்தன்சிவமெனமொழிந்திடுமாகமஞ்
சத்தியஞ்சீவன்சங்கரனென்றே
குற்றமிலுன்மறைகூறும்வகுத்தே.

வேறு.

ஆதலாற்குருப்பிரானதிகமென்றனால்
வேதமுமுறையிடும்விவேகியானவன்
போதொடுநீரொடும்போற்றிநாடொறுங்
காதலாற்குருபதங்கைவிடானரோ. (௪)

ஞானதருமான்மியம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௪௫.

---

## கொல்லாவிரதம்.

---

ஆருயிர்க்கொலாதமேலோரறிவினையறிந்தநல்லோர்
தீமனமொடுக்கவல்லோரிவர்களேதேவராவர்
காமராய்க்கற்பழித்தோர்களவுசெய்துடல்வளர்த்தோர்
மாமிசந்தின்போரெல்லாமானிடப்புலையராவார். (௧)

வேறு.

அரியவாக்கையின்மானிடவாக்கையேயாக்கை
விரியுநோன்பினிலுயிர்க்கொலாவிரதமேவிரதங்
கருதிற்றெய்வதங்கண்ணுதற்றெய்வமேதெய்வந்
தெரியிற்றேவிகாலோத்தரதேற்றமேதேற்றம். (௨)

வேறு.

அம்மாவெனவலறவாருயிரைக்கொன்றருந்தி
யிம்மானிடரெல்லாமின்புற்றிருக்கின்று
ரம்மாவெனுஞ்சத்தங்கேட்டகன்றமாதவர்க்கும்
பொய்ம்மாநிரையமென்றுற்புசித்தவர்க்கென்சொல்லுவதே. ()

வேறு.

கங்கையிற்படிந்திட்டாலுங்கடவுளைப்பூசித்தாலு
மங்குல்போற்கோடிதன்மம்வள்ளலாய்வழங்கினாலுஞ்
சங்கையில்லாதஞானதத்துவமுணர்ந்திட்டாலும்
பொங்குறபுலால்புசிப்போன்போய்நரகடைவனன்றே. (௪)

கொலையிலானுதவுமன்னங்கூறிற்பேரமுதமாகுங்
கொலையுளானுதவுமன்னங்கூறிற்பேர்விடமதாகும்
புலையர்தம்மனையிலுண்போன்புலையனுமாறுபோலக்
கொலைஞர்தம்மனையிலுண்போன்கொலைஞனேயாவனன்றே.

கலையெலாமுணர்ந்தானேனுங்கரிசறத்தெளிந்தானேனு
மலையெனவுயர்ந்தானேனுமனமயலகன்றானேனு
முலகெலாம்புகழப்பல்லோர்க்குதவியகையனேனு
மிலகியவிரக்கமின்றேலெழுநரகடைவனன்றே. (௬)

இத்திறனருள்கைப்பற்றியுயிர்க்கெலாமிதத்தைச்செய்க
சத்தியவிரக்கமின்றேன்முத்தியைச்சாரானாகும்
பத்தியால்யோகஞ்சாரும்யோகத்தாற்பரமஞானஞ்
சித்தியாமிதற்காதாரஞ்சீவகாருணியமன்றே. (௭)

கொல்லாவிரதம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-க௫.

## யாக்கையருமை.



மக்களாக்கையிற்பிறத்தலேயரிதுமற்றதிலுந்
துக்ககூன்குருடூமையைத்துறத்தலுமரிது
நற்குலத்திடைவருதலுமரிதுஞானத்தான்
முக்கணீசனுக்காட்படன்முற்றிலுமரிதே.

வேறு.

உடம்பெலாநீங்கிநல்லுடம்புபெற்றவ
ருடம்பினாலுறுபயனென்றமோர்கிலா
ருடம்பினாலுறுபயனவதேதெனி
லுடம்புயிருணர்வையுமோரலாகுமே. (உ)

வேறு.

அரிதுமானிடயாக்கையிற்பிறத்தன்மற்றதினு
மரிதுவேதநூல்சைவநூலாலகந்தெளித
லரிதவ்வீசனோராமெனவறிவுமேலிடுத
லரிதுவாய்ப்பமறையமறைந்திடாததினீடங்கிடலே. (௩)

யாக்கையருமை-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கடுசு.

சரிதைகிரியாயோகவிலக்கணம்.

பெரியவரிம்மானிடயாக்கைபெற்றவர்
சரிதையுங்கிரியையுந்தான்செய்கின்றிலர்
சரிதையுங்கிரியையுந்தான்செயாவிடி
லரியயோகத்தினையுணரலாகுமே. (க)

வேறு.

எங்கணுநிறைந்துநின்றவீசனேடொன்றலாலே
சங்கரனேமேயென்னச்சமாதியோகம்புரிந்து
துங்கவெண்மதிபோலுள்ளந்துலங்கிடச்சிவானுபூதி
யங்குதித்திட்டவானந்தமடைவதேயமலயோகம். (உ)

வேறு.

அரியவரிம்மானிடயாக்கைபெற்றவர்
கருமயோகங்களாற்காலந்தள்ளுவ

ருரியமெய்ஞ்ஞானயோகத்தினுலரன்
றுரியயோகத்தினைச்சோதியார்களே. (ங)

வேறு.

ஒருகணமிருப்பன்றெய்வவுருவினிலீசன்ருன்மற்
றிருகணஞ்செங்கோலோச்சுமிறையவர்பாலிருப்ப
ஞருமறையவர்குழாத்துளம்பூவீழளவிருப்பன்
றுரியயோகிகளுளத்திற்றூங்குவனிருந்தெப்போதும். (ச)

சரிதைகிரியாயோகவிலக்கணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கசு0.

---

## ஞானநிட்டையிலக்கணம்.

சராசரப்பொருள்கடோறுந்தங்கிநின்றவற்றின்றன்மை
விராவுதலின்றியொன்ருய்விமலமாய்விண்ணினெய்தாய்ப்
பராபரவெளியாய்நீங்காப்பாசசாலங்கடந்த
நிராமயசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை. (க)

மத்திமவுடனுனுகாவளர்கரணந்தானுகா
மொய்த்தவிந்தியந்தானுகாமூலவாயுவந்தானுகா
சித்திரதீபம்போல்ச்சீவபாவங்கழன்று
நித்தியசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை. (உ)

கன்மவாதாரமாறுங்கடந்துகற்பனைகடந்து
வுன்மனைகடந்துசீவவுணர்வையுங்கடந்துமேலாய்ச்
சின்மயமாகிநின்றசிற்பரநிலைகடந்து
நின்மலசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை.

மக்களுமனையுநீத்துமாதாராசைநீத்துச்
சொர்க்கமேலாசைநீத்துச்சுத்தனாய்ப்பற்றொன்றின்றிக்
கற்கவேண்டியதுநீத்துக்கருதிருவினையுநீத்து
நிர்க்குணசிவந்தானாகிநிற்பதுஞானநிட்டை. (௪)

வேறு.

சிந்தனைபுறஞ்செலாச்சிவோகம்பாவனை
சந்ததமுனாற்றிடிற்சமாதிவந்துறு
மந்தாற்சமாதியாலறிவுமேலிடு
மிந்தநன்னிலையிலேயிருக்கற்பாலையே. (௫)

ஆங்கறியாமையுமறிவுநீங்கவே
யோங்கியவறிவொடுமொன்றுபட்டவண்
ஏங்குபேரானந்தத்தூக்கம்வந்துறு
மூங்கைகாண்கனவெனமுத்திகாண்டியே. (௬)

வேறு.

பாவனாதீதர்தன்னினொடநீயும்பதிந்துநிற்பாய்
பாவனாதீதர்தன்னினெஞ்சகம்பதியாதாயின்
பாவனைதனிலேநெஞ்சைப்பழக்கிடுபழுத்தகாலைப்
பாவனாதீதம்வந்துபதிந்திடும்பான்மையோடே. (௭)

ஞானநிட்டையிலக்கணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௯௯

---

## ஐம்புலனால்வருமிலக்கணம்.

சத்தத்தாலசுணமாயும்பரிசத்தாற்றந்திமாயும்
வெற்றிசேருருவத்தாலேவிட்டிலம்பறவைமாயும்

பற்றியாரிரதத்தாலேபாணிமீனங்கண்மாயும்
மொய்த்தகந்தத்தினாலேமூசுவண்டினங்கண்மாயும். (௧)
ஓதியவசுணமாதியொன்றொன்றாலழியாநிற்குங்
காதினாற்றோக்கான்மூக்காற்கண்ணினானாவாலிந்தச்
சாதிமானிடர்களெல்லாமஞ்சினாற்சாகாநிற்பர்
போதமேவிட்டகாலம்புலன்வழிப்போகாரன்றே. (௨)

வேறு.

ஐம்புலன்வழியோடிமானிடரெலாமழிவார்
ஐம்புலன்வழிந்தாவிமேலமாருமலைவார்
ஐம்புலன்வழியடைத்தவன்யோகியேயன்றி
ஐம்புலன்வழியடைத்தவருலகினில்யாரே. (௧)

ஐம்புலனால்வருமிலக்கணம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௬௬.

---

## ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம்.



ஐம்புலனடக்கலாலுமறிவினையறிதலாலு
மின்பதுன்பங்களெல்லாமியல்பெனவொறுத்தலாலுஞ்
செம்பொருளறைதலாலுஞ்சிவோகம்பாவித்ததாலும்
நம்பனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே. (௧)

வேதநூலுணர்தலாலும்விதிவழியொழுக்லாலுஞ்
சூதகந்துறத்தலாலுஞ்சுகமயமாதலாலும்
பேதமற்றிருக்கையாலும்பெரியவர்கூட்டத்தாலு
நாதனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே.

ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௭௧.

---

## சந்நியாசியிலக்கணம்.



ஆக்கைக்குஞ்சாக்கிரமேயனைத்திற்குஞ்சாக்கிரமே
போக்கொடுவரவுமில்லைபுண்ணியபாவமில்லை
வாக்கொடுமனமுமில்லைமந்திரந்தியானமில்லை
சாக்கிரமாத்திரமேயென்றுதெளிந்தவன்சந்நியாசி. (௧)

வேறு.

அறிவிலறிவாயகண்டிதமாயனந்தானந்தமயமாகிச்
செறியும்பரமசிவந்தன்னைத்தன்னுட்கண்டுதியானித்துக்
கறவையருந்தப்பால்சுரக்குங்காலமேனுங்கடைப்பிடிப்போர்
பிறவிக்கடலைக்கடந்தோர்களவரேயுலகிற்பெரியோரே. (௨)

மண்போற்பொறுமையுடையோருமதிபோற்சாந்தமுடையோரும் [ங்
புண்போலுடலைப்புனைந்தோரும்புனல்போலொழுக்கம் பூண்டோரு
கண்போலிரக்கமுற்றோருங்கனல்போற்புசிக்குங்கதியோரும்
விண்போலறிவையறிந்தோரும்பிறவாரிந்தமேதினிக்கே. (௩)

சந்நியாசியிலக்கணம் - முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௱௭௪.



## அதிவன்னாச்சிரமியிலக்கணம்.



ஊன்றுமூன்றவத்தைக்கப்பாலுயர்முத்தனாகியந்த
மூன்றவத்தைக்குஞ்சான்றாய்முதலொளியாய்ப்பிறங்கித்
தோன்றுமாதேவதேவையவன்சும்மாவனுபவிப்போ
னென்றவனவனேமேலாமதிவன்னாச்சிரமியாவான். (௧)

வேறு.

நிறைந்தமாகடற்போலுயர்நெடுமறைமுடியிற்
சிறந்தபோதமாவாக்கியசிரவணத்தாலே
யிறந்தசிந்தையினாற்றனையீச்சுரனாக
வறிந்தவன்சொலுமதிவர்ணாச்சிரமியாவானால். (௨)

வேறு.

வருணமாச்சிரமமாகிமலினதேகத்தின்கண்ணே
கருமலிமாயைதன்னாற்கற்பிக்கப்பட்டதெல்லாம்
பொருவருபோதனாமெற்கெப்போதுமில்லையென்றே
யருமறையாலுணர்ந்தோனதிவர்ணாச்சிரமியாவான். (௩)

சொன்னத்திற்கடகமாதிசூழணிந்தோன்றுமாபோ
லென்னிடத்தகிலமெல்லாங்கற்பிக்கப்பட்டதென்றே
பன்னுமாமறையந்தத்தாற்பகுத்தறிந்தனுபவித்திங்
கன்னியமிலாமைகண்டோனதிவர்ணாச்சிரமியாவான். (௪)

ஆதித்தன்சன்னிதானத்தகிலஞ்சேட்டிக்குமாபோற்
போதத்தென்சன்னிதானத்திற்புவனஞ்சேட்டிக்குமென்றே
வேதத்தினந்தத்தாலேமெய்ப்படவறிந்துணர்ந்தோ
னாதித்தனிவனேயென்னவதிவர்ணாச்சிரமியாவான். (௫)

இப்பியிற்பிராந்தியாலேயிரசிதந்தோன்றுமாபோன்
மெய்ப்படுமென்னிலிந்தவியன்சகமுதித்ததென்றே
யிப்படியானேனுமெழின்மறைமுடிவினாலே
யற்புதவறிவுணர்ந்தோனதிவர்ணாச்சிரமியாவான். (௬)

பறையர்தம்முடம்பின்கண்ணும்பசுவாதியுடம்பின்கண்ணு
மறையவருடம்பின்கண்ணும்வானவருடம்பின்கண்ணு
நிறையுமாகாயம்போலநிற்குமாதேவன்றானென்
றறிவினாலறிந்துணர்ந்தோனதிவர்ணாச்சிரமியாவான் (௭)

இந்தஞானத்தினற்றன்னஞ்ஞானமிறக்குமத்தாற்
றெந்தமாந்துவிதவத்துதொலைந்திடுந்தொலைந்தவத்தாற்
புந்திதானசிக்குமந்தாற்புகழிகழ்நசிக்குமத்தா
னந்திபங்குடும்பமத்தாறுனனுஞ்சொருபந்தோன்றும். (அ)

பாம்பிதென்றுணர்ந்தபோதுபழுதையேயில்லைவெய்ய
பாம்பிதன்றெனவுணர்ந்தாற்பழுதையேயாறுற்போலச்
சோம்புறுகுடும்பியென்னிற்றுக்ளுறுசீவனுகுஞ்
சோம்புறக்குடும்பியென்னிற்றுகளறுபிரமமாவான். (கூ)

அதிவன்றைச்சிரமியிலக்கணம் - முற்றிற்று
ஆக திருவிருத்தம்-கஅக

## மகாவாக்கியவிலக்கணம்.

ஆதிதிருநான்மறைமுடியிலறைபுந்தத்துவமசியென்றே
யோதிலதுநீயாறுமென்றுரைக்குமும்மைப்பதமாகப்
போதமுடையோயிதன்பொருளையெவ்வாறெடுத்துப்போதிப்பேன்
பேதமகன்றவுள்ளத்தாற்காணும்பெரியவாக்கியமே. (க)

வேறு.

கன்னனுன்புளிஞனென்றேகவலையுற்றழுங்குங்காலக்
கன்னநீகிராதனன்றுகௌந்திபுத்திரனென்றுற்போ
லன்னியவுடனுனென்றேயயர்ந்தளமழியேன்மைந்த
வன்னியமென்றுகண்டவறிவுநீபுணர்ந்துகொள்ளே. (உ)

கல்லெலாமெறிந்துமீதிக்கையினையெறிவாருண்டோ
சொல்லியகருவியெல்லாந்தொலைத்தவன்மீதியன்றே
வல்லநீ ரவனேசோதியாகியபிரமமாவா
னெல்லையின்மறைகளெல்லாமிவ்வணமுரைக்குமன்றே. (ஙூ)

வேறு.

ஒருவனொருதேயத்திற்பிரமசரியாயுற்றான்
மருவிமற்றோர்நாட்டகத்தின்மகிழ்கிரகியாயினான்
பரவிபின்னோர்மண்டலத்திற்பகர்துறவியாய்நடித்தான்
விரவியகோலம்போக்கின்வேறில்லையவனிவனே. (௪)

வேறு.

ஓடிமாநதிகடந்தோரொன்பதுபேரையெண்ணித்
தேடிம்பத்தாலேக்காணன்றிகைத்துநின்றலறுகிற்ப
நீடியவொருவனாலேநீபத்தாமெனன்னலோடும்
வீடியதுயரமெல்லாம்வியப்பினையடைந்தானன்றே. (௫)

அன்னியகருவியெல்லாநாமலவென்றறிந்தோன்
பின்னரக்கருவியெல்லாம்பிரித்தவன்றனைமறப்ப
மன்னியசேடநீயேயென்றுமாதவத்தின்வந்த
செந்நிலைக்குரவன்சொல்லாற்றெளிவதுஞானமாமே. (௬)

மச்சுக்கூப்பிட்டுதென்றேமதிப்பவருண்டோவந்த
மச்சுளேயொருவனன்றிமச்சுக்கூப்பிடுமோபேதாய்
நச்சியதேகசேட்டையாவையுநாடிப்பார்க்கி
லச்சுளேநின்றவான்மாவாலெனவாய்ந்துகொள்ளே. (௭)

முப்பகைகடந்துஞானமூத்திரைதிகழவேதஞ்
செப்புமாவாக்கியத்தின்றெரிசனங்கிடைத்தமேலோ
ரப்பிரமேயமானவறிவொடுங்கலவாராயி
னிப்புவிதன்பான்மீட்டுமெய்துவரையமின்றே. (௮)

வேறு.

பொன்னையன்றிப்பூணில்லைபூணையின்றிப்பொன்னில்லை
யென்னையன்றிச்சிவனில்லைசிவனையன்றியானில்லை

யின்னவண்ணமறிந்தோனேயீசன்றனையுமறிந்தோனு
மின்னவண்ணமறியாதானீசன்றனையுமறியானே. (௯)

வேறு.

நிறையறிவாயிருந்துநின்மலன்றன்னைத்தேடி
மறைமுதனூலாராய்ந்தும்பின்னருமயங்குந்தன்மை
யிறைவனேயெனக்குநாக்குண்டில்லையோவென்றுகேட்க
வறைவதுநாக்கேயென்னவகந்தெளியானைப்போலும். (௧௦)

ஆதவன்றன்னைப்பார்த்திட்டகிலத்தைப்பார்த்தபோது
வாதவனொளிமேலிட்டேயகிலந்தோன்றாதவாபோற்
சேதனச்சிவத்தைநோக்கிச்செகத்தினைநோக்குங்காலைச்
சேதனச்சிவமேலிட்டுச்செகமெலாமறைந்துபோமே. (௧௧)

வேறு.

என்றுமிருந்தபடியிருக்குமியல்பேயென்னுமொருவேத
மொன்றேயொழியவிரண்டாம்வத்தில்லையென்னுமொருவேதம்
வென்றிப்பரமுநீயும்வேறில்லையென்னுமொருவேதந்
தன்றமதுவேநீயாநுயெனவேசொல்லுமொருவேதம். (௧௨)

வேறு.

நாலுவேதமுந்தத்துவமசியெனநவிலுஞ்
சாலநீர்தெளிந்துறுதிகொள்வீரெனச்சாத்திப்
பாலலோசனன்மவுனமுற்றிருந்தனன்பகுவக்
கோலநால்வருமிட்டையைக்கூடினரன்றே. (௧௩)

மகாவாக்கிய லக்ஷணம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௧௬.

## அனுபவவிலக்கணம்.



ஊசலாடுளமுமின்றியுருவருவுபயமனமுக
கோசரவகோசரங்கள் குறிகுணபேதமின்றிப்
பாசசாலங்கடந்துபராபரைக்கப்பானின்ற
வீசனையறிந்தஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (௧)

சிறையறக்கிடலொடுங்குஞ்செறிநதிக்குலங்கள்போலு
மறகுறவேடுநீக்கமன்னனைச்கூடல்போலு
மறிவறியாமைநீக்கவறிவினுளறிவாய்நின்ற
விறைவனைக்கூடுஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (௨)

வேறு.

அரியணையிலிருந்துலகவரசாட்சிபுரிந்தாலுமங்கையேற்றுத்
தெருவுதொறுந்திரிந்திரந்துதின்றாலுமிளம்பருவத்தெரிவைமாரைப்
பிரியாமலிருந்தாலும்பிரிந்துதவம்புரிந்தாலும்பேசிற்றெல்லாம் [றே.
விரிசிவன்முத்தனுக்கிங்குடம் பாடேயன்றியொன்றும்விரோதமின்

வேறு.

ஆயிரமடர்ந்தை யாகந்தோய்ந்துநான்
றூயவனென்றமால்சூளுஞ்சாற்றினான்
காயமுங்கரணமுங்கடந்ததன்மையா
னீயுமந்நிலையிலேநிற்கப்பாலையே. (௩)

அறுசுவையடிசிலையாரவுண்டவன்
வெறுமுபவாசிநானெனவிளக்கினான்
சிறுநுதற்பேதையைத்தினமுஞ்சேர்ந்தவன்
றுறவிநானெனவுளந்துலங்கக்காட்டினான். (௫)

வேறு.

கேவலச்சனகன்முன்னாட்கேள்பகையிரண்டுமின்றி
மேவியசுத்தமென்னுமெல்லணைமீதிருந்து
சாவுயர்பிறப்புமில்லாத்தத்துவச்செங்கோலோச்சிப்
பாவனையிலாதகானம்படர்ந்தருமாறினேனே. (௬)

அனுபவ விலக்கணம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ0உ.

---

## சிவயோகவிலக்கணம்.

---

காமமாதிகளைநீத்துக்கரணவாதனைகடந்து
நாமதுவெனுஞ்சம்பந்தஞானமேஞானமாகி
யோமொழிப்பொருளைத்தேறியுணர்வுணராமைபோக்கி
யாமைபோலடங்கிநிற்பதேயமலயோகம். (க)

அறுவகைச்சமையத்தோர்க்குமதீதமாயகளமாகி
மறுவறுபொருளாயொன்றாய்மன்பதைதொறுநிறைந்து
குறைவறுபிரமாமேயென்றுகோசங்கணீங்கி
யறிவுருவாகிநிற்றலழகியயோகமாமே. (உ)

உடலொருமுயிருமாகியுயிர்தொறுமுணர்வுமாகிச்
சடமசடங்கடோறுஞ்சாக்கியுமாகிநின்ற
வடல்புனைசிவனார்நம்மையன்றிவேறில்லையென்றே
யுடைகுடவிசும்புபோலொன்றுதலேயோகமாமே. (௩)

சிந்தையைப்புறத்தேவிட்டுத்தேகமோநாமென்றுன்னி
யந்தமில்போகம்வேண்டியார்வமீதூரநோற்குஞ்

சந்தமற்றெருளிருமந்தயோகியைச்சந்தித்தோரும்
வந்தனைசெய்துளோரும்பெறுவர்மாகிரையவைப்பே. (௪)

ஆகையாற்கருத்தடங்கியசைவறலியோகமாகு
நாகமார்முழைஞ்சுபூங்காநதிபாழுங்கோயிலாதி
யோகதானிங்கள்புக்கியுயர்சிவோகபாவித்துத்
தேகமாதிகளனல்லவென்றுசித்திரம்போனிற்பாய். (௫)

இம்முறைசிவயோகத்திலிருப்பவர்சீவன்முத்தர்
நன்மையிறுதந்தோன்றாநவவிதக்கடந்துபோறுற்
செம்மையசுவானுபூதிசெனித்திடுமனந்தானந்த
விம்மிதந்தோய்ந்துந்தோயாதிருப்பர்கள்விதேகமுத்தர். (௬)

காட்டெரிமிராசுணங்கள்கண்படுவரிமாவேங்கை
வீட்டுறுபுலவன்றாதால்வெருவுறுதிருக்கும்யோகி
காட்டமூன்றுடையநாதனடிவலாண்ணலாலும்
வேட்டுறுபுலனெடுங்கிவிவேகமேவிடுதலாலும். (௭)

மித்தையாமுடலமென்னவிவேகமேவிடுதலாலே
சித்தனுனெனும்விவேகநேரிடும்நேர்ந்தகாலை
முத்தர்பேரவைகிடைக்குங்கிடைத்தலான்முதிர்ந்தஞானஞ்
சித்தியாமன்றேசீவன்முத்தனுய்ச்சிவனுமாவன். (௮)
காசியிலிறக்கமுத்திகமலையிற்பிறக்கமுத்தி
தேசுறுதில்லைமன்றுட்டெரிசிக்கமுத்தியென்ப
ராசையையிறக்கமுத்தியாருயிர்பிறக்கமுத்தி
யீசனைக்காணமுத்தியெதுவரிதானமுத்தி. (௯)

சிவயோகவிலக்கணம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௧௧.

## வாதனைமாண்டாரிலக்கணம்.

இல்லறம்பொருளெனவிருந்தகாமிய
வல்லல்சேர்வாழ்க்கையினையிழந்திறிப்பினு
மெல்லையில்ஞானவின்பத்தையெய்தியே
புல்லியும்புல்லிடாதிருப்பர்புண்ணியோர். (௧)

போதெலாமவத்திலேபேதக்கிடாவகை
சாதலும்பிறத்தலுந்தணந்தஞானியர்க்
காதரம்பெருகிடவடிமைசெய்குவார்
காதகங்கரத்தையுங்கடந்தகாரணர். (௨)

வேறு.

சாத்திரஞ்சமயம்வேண்டார்தத்துவக்கத்துவேண்டார்
கோத்திரங்குலங்கள்வேண்டார்கூறுமாவிரதம்வேண்டார்
மூர்த்திசேவைகளும்வேண்டார்முன்னவன்பூசைவேண்டார்
தீர்த்தமும்வேண்டார்ஞானச்சின்மயமானமேலோர். (௩)

உம்பர்வாழுலகும்வேண்டாருலகரசாட்சிவேண்டார்
பொன்புனைமகளிர்வேண்டார்புண்ணியபாவம்வேண்டா
ரின்பொடுதுன்புவேண்டாரிறப்பொடுபிறப்பும்வேண்டா
ரைம்புலப்பகையைவேண்டாரறிவினையறிந்தமேலோர். (௪)

வேறு.

அன்னமயமுதலாகவானந்தமயமீறாய்ப்
பின்னநிலையினைகடந்தபேரின்பசாகரத்து
ளின்னபடியென்றறியாதிருந்தசிவயோகிக்குச்
சொன்னமகளும்புவியுந்துரும்பாகத்தோற்றுமால். (௫)

வாதனைமாண்டாரிலக்கணம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௧௬.

## பிராரத்தவிலக்கணம்.



வேம்புறுபுழுவைவாங்கிமென்கரும்பிடைவிட்டாலும்
வேம்பையேநோக்கிப்பின்னும்வியப்புறுமாறுபோலச்
சோம்புமூன்றவத்தைநீக்கித்துரியத்தில்வைத்தபோதுஞ்
சோம்புமூன்றவத்தைதன்னைத்தோயவேவினைக்குஞ்சீவன். (௧)

பாசத்தைநீக்கியாசான்பதியிடைப்பதியவைத்தும்
பாசத்தைமீட்டுநோக்கிப்பரிந்திடும்பசுவின்றன்மை
மாசுற்றவுவரைப்போக்கிமலமிசைவைப்பமேக
மாசற்றவரையைநீங்கிவாரியிற்புகுநீர்போலும். (௨)

பிராரத்தவிலக்கணம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௨௧௮.



## சிவத்துரோகவிலக்கணம்.



சுருதிகண்முறைமுறைதுதித்தகத்திய
னிருவினைக்குறும்பெறியெதியொடும்வரப்
பரசிவமிவரெனப்பதைத்தெழாமையால்
வரனெனுமாதவன்மகிடமாயினன். (௧)

பாசமோசகன்சிவன்பரசுவார்வினை
நாசமாக்குவனெனமறைநவிற்றியு
மீசனைப்புகழ்ந்திடாதிகழ்ந்ததக்கனு
ராசுறுதகர்முகமாயினாரரோ. (௨)

சிவத்துரோகவிலக்கண-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௨௨0.

## சுவானுபவவிலக்கணம்.



நன்னெறியறிதருநல்லமாணனே
யென்னனுபவமெலாமெடுத்தியம்பினே
னுன்னனுபவந்தனையுரைத்தியென்றலுந்
தன்னனுபவந்தனைச்சாற்றன்மேயினன். (௧)

வேறு.

ஆகிநின்றழிதலாலுமருவருப்புடையதாலுங்
காகநாய்கவர்தலாலுங்கனலிடைப்படுதலாலுஞ்
சோகமேவிளைத்தலாலுஞ்சுகதுக்கமறியாத்தாலுந்
தேகநானல்லவென்றுந்தேகிநானென்றுங்கண்டேன். (௨)

இந்தியமான்மாவென்பரிறைவநின்றிருநோக்கில்லார்
முந்தியபிராணன்றன்னையுயிரெனமொழியாநிற்பர்
சிந்தையைமனவகத்தைப்புந்தியைச்சிலவென்பர்
சந்துறுமிவைகட்கெல்லாஞ்சாக்கிநானென்றகண்டேன். (௩)

பிண்டமாமுடனல்லேன்பிராணவாயுவுநானல்லேன்
கண்டவைம்பொறியுமல்லேன்காரணமோர்நான்குமல்லேன்
பண்டையவறிவனென்றன்னருள்கொண்டுபார்க்கி
லெண்டிசைகீழ்மேலெங்குமேகனாயிருக்கின்றேனே. (௪)

வேறு.

தூலத்தனுவுநானல்லேன்சூக்கத்தனுவுநானல்லேன்
மூலத்தனுவுநானல்லேன்மும்மைத்தனுவும்பொய்யன்றோ
ஞாலத்தனுவைநானென்றேநம்பிக்கெட்டேனெங்காலஞ்
சாலத்தெளிந்தேனினிஞானதனுவேயெனக்குத்தனுவென்றே.

வேறு.

கானலைநீரென் றன்னிக்காதலித்திடுவார்போல
ஆனுடனுனென் றன்னிபுணர்வினைப்பிரிந்திருந்தேன்
கானலைநீரன்றென் றுகைவிடுவார்கள்போல
ஆனுடனானன்றென்றேபுணர்வொடுமுறங்கினேனே. (சு)

ஊனுடல்பொறிபிராணனுறகரணங்களொன்றும்
கானகங்கடந்தஞ்ஞானக்கரிருட்பரப்புநீக்கித்
தானெனுஞ்சிறார்தீத்தத்தற்பரைப்பொழிலினின்று
மோனியாய்ஞானந்தமுத்திமாநகரங்கண்டேன். (எ)

கானகம்போலெங்கணுமருவியெப்பொருளுந்தானாய்ச்
சூனியப்பொருளாயொன்றாய்த்துரியமுங்கடந்தபாழாய்
ஞானமாத்திரமாய்நின்றநாதாந்தவின்பந்தன்னைத்
தானறிந்திருப்பதல்லாற்சாற்றிடப்படாதேயெந்தாய. (அ)

வேறு.

எல்லாமிறந்தயோகியர்க்குமெட்டாதிருந்தபேரின்பை
யெல்லாநானென்றகங்கரிக்குமேழையறியாப்பேரறிவைச்
சொல்லார்மனத்தாரிறந்திருந்ததுரியாதீதப்பெரும்பாழைச்
சொல்லாலுரைக்கப்படுங்கொல்லோவென்போல்வந்தயோகனே ()

வேறு.

ஆசையாலிதுவேசிவவறிவையுங்கடந்தமுத்தி
யோகமாமறையின்சென்னியுபநிடத்துமீதே
சேகறமன்த்தாயிந்தத்தேகம்போமளவுநிற்பாய்
சோகசட்கத்தால்வெட்டித்துமியெதிர்பிறவியெல்லாம். ()

அநுபூதியிலக்கணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உ௬ ௦.

# குருதோத்திரம்.



நாயனை யகாயனாக்கிக்கண்டனை யகண்டனாக்கிப்
பேயனைப்பிரமமாக்கிப்பிறப்பிறப்பிலாமையாக்கித்
தாயினு மினியனாகிவந்தெனைத்தகைந்தாட்கொண்ட
ஞாயசற்குரவனின்னைத்தொழுந்தொறுங்களிதுளங்கும். (௧)

வேறு.

ஆழ்ந்தேகிடந்தேன்பவக்கடலிலனேககாலம்புகலின்றிச்
சூழ்ந்தேகருணையாலெடுத்துத்துரியக்கரையிற்சேர்த்தாய்க்கு
வீழ்ந்தேவீழ்ந்தேபணிந்திறைஞ்சிவியந்துவியந்துமகிழ்க்கடலில்
வாழ்ந்தேனவாழ்ந்தேன்கைம்மாறுகாணேன்வலியவந்தெடுத்தாய்க்கே.

வேறு.

மும்மாயைக்கப்பால்முழுப்பாழுக்கப்புறத்தே
சும்மாவிருக்கத்துரியங்கடந்தநலச்
சிம்மாதனமளித்தசிவஞானதேசிகற்குக்
கைம்மாறுபோதமலாற்காணேன்கடையேனே. (௨)

உண்ணாதசோறுமுடிக்காதவத்திரமும்
பண்ணாதபாயும்படுக்காதநித்திரையு
மெண்ணாமனுவுமியம்பாததோத்திரமுங்
கண்ணாலளித்தார்க்குக்கைம்மாறுகாணேனே. (௩)

தீராதவைம்பொறியுந்தீர்த்துச்சிவமாக்கிப்
பேராதவானந்தப்பிறங்கன்மிசைவைத்தாருக்
காராதவன்பாலகங்குழைந்துமெய்யரும்பிப்
பாராதெண்டனிட்டுப்பத்திசெய்யக்கடவேனே. (௪)

கல்லாலின்கீழிருந்தகண்ணுதலென்போலாகிக்
கல்லாவுலகிற்கருணையொடும்வந்தெனக்குச்

சொல்லாதசொல்லையொருசொல்லாலுரைத்தார்க்குச்
சொல்லாதசொல்லானற்றோத்திரங்கள்செய்வேனே. (௬)

வேறு.

ஒன்றென்றும் பலவென்று முபயமென்று முருவென்று மரு வென்று முறைவதென்று, நன்றென்றுந் தீதென்று நானேயென்று ஞானமென்று ஞேயமென்று ஞாதாவென்று, மன்றென்று மாமென் றுஞ் சமயப்பேய்க ளறைகின்ற பிணக்குவழியனைத்துநீத்துக், குன்ற லிலா வானந்தக் குரவனின்னைக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட் டேனே. (௭)

செறிவாகு மலமற்று மாயையற்றுத் திரிவிதமாங் கன்மமலத் திரளுமற்றுப், பிறிவாகுங் குணமற்றுக் குறியுமற்றுப் பேதாபேதங்க ளற்றுப் பேச்சுமற்று, வறியாமை யறிவற்று வனந்தகோடி யாதவர் போ லெழுகின்ற பரையுமற்றுக், குறியாத வானந்தக் குரவனின்னைக் கும்பிட்டேனென்பிறவி பின்பிட்டேனே. (௮)

பொய்யாத புனன்மூழ்கிச் சாந்தமென்னும் பொடிபூசிக் கருணை மணி புனைந்தெஞ்ஞான்று, நையாத வுளமெல்லா நையநாவா னவி லாத மாமனுவை நவின்றுமேலீ, லையாறு மாறாறுங்கடந்துநின்ற வானந்தத்தேசிகநின் னடிப்போதுக்கே, கொய்யாத மலர்கொண்டங் கரிச்சித்தேத்திக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௯)

ஆசிலன்னமயகோசந் தாண்டியப்பா லழியாத பிராணமயகோ சந்தாண்டி, மாசின்மனோ மயகோசந் தாண்டியென்று மாறாவிஞ் ஞானமய கோசந்தாண்டி, நாசமுறு மானந்த கோசந்தாண்டி ஞான வடி வாய்நின்ற குரவநின்னைக், கோசமெலா மற்றசிவ கோசியாகிக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௧௦)

தத்துவங்களாறாறும்பின்னிட்டப்பாற் றத்துவாதீதமாந்தன்னை க்கண்டு, பற்றொன்று மில்லாத பரையைக்கண்டு பரிந்துபரிந்துள்ளு

ருகி யதிலொடுங்கி, வெற்றவெறுமானந்த வுருவங்கண்டு விழையாம
ல்விழைந்தப்பால் வெளியைக்கண்டு, குற்றமெலாமறநீத்தங் கறிவாய்
நின்று கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௬௬)

வே று.

பாசத்தாற்பாசியாகிப் பலபலபிறப்பிற்சென்று
பாசத்தாற்பிறந்திறந்து பலபலபோகந்துய்த்த
பாசத்தைத்தாளாற்போக்கிப் பதித்துவம்பதித்தநாதன்
பாசத்தைநினையுந்தோறும் பசுத்துவங்கழலுமன்றே. (௬௨)

ஒன்றென்பாரொன்றேயென்க வோரிரண்டென்பாரென்க
நன்றென்பார்நன்றேயென்க நவையென்பார்நவையேயென்க
வின்றென்பாரென்கவன்றி யுண்டென்பாருண்டேயென்க
வன்றிதாமென்னுமுத்தி யடியனேற்களித்தானுசான். (௬௩)

வடக்குளேதெற்குந்தெற்கில் வடக்கையுங்காட்டுவார்போ
லுடற்குளேயுயிருமந்தவுயிர்க்குளேயுணர்வுங்காட்டி
நொடிக்குளேமலமகற்றி நுண்ணுணர்வாக்கிமீட்டும்
விடக்குளேபிறவாவண்ணங் காத்தருள்விகிர்தபோற்றி (௬௪)

அய்யமாங்காட்டைஞான வழலினுற்றகித்துப்பாதச்
செய்யதாமரைகள்சூட்டித் திவ்வியமணத்தனுக்கி
மெய்யடியாரைக்கூடும் விவேகமும்மெய்ம்மையில்லாப்
பொய்யடியாரைக்கூடாப் புந்தியுந்தந்தாய்போற்றி. (௬௫)

வே று.

தன்னுளுலகுமுலகதனிற் றனுமாகிச்சகசமாய்ப்
பின்னையபின்னையெனுஞ்சத்தி பிரியாதிருக்கும்பிரமமா
யுன்னுமுணர்வுக்குணர்வாகி யுருவாயருவாயுபயமுமா
யென்னுளிருந்தபரசிவத்தை நின்றுகண்டேனிறையோனே. (௬௬)

மண்ணைவிழுங்கிப்புனல்கனலை விழுங்கிவாயுதனைவிழுங்கி
விண்ணைவிழுங்கிவெண்மதியை விழுங்கிவெய்யோன்றனைவிழுங்கி
மொண்ணையியமானையும்விழுங்கி முற்றும்விழுங்கிப்பற்பலவா
மெண்ணைவிழுங்கியிருந்ததனை நின்றற்கண்டேனிறையோனே. ()

ஸ்தோத்திரம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௨௪௰.

---

## விடபிதவிலக்கணம்.

காகுத்தன்பதந்தாக்கக் கல்லெழிற்பெண்ணானாற்போ
லாகத்தனைக்கிடந்த வடியேனைப்பதந்தாக்கிப்
பாகத்தைவருவித்துப் பழமறையின்பொருடேற்றி
மாகத்தனாக்கிவித்தோய் மறவேனுன்றிருவடியே. (௧)

எல்லாருங்களிதுளங்க விரும்பையிரும்பொன்னாக்கி
நல்லார்கடொழுந்தேவாய் நாட்டுகின்றஞாயம்போற்
கல்லாதபுலையேனைக் கருணையினாற்கடைக்கணித்துப்
பொல்லாதபரப்பிரம மாக்கினையென்போல்வந்தே. (௨)

### வேறு.

அனாதிகேவலத்தினி லழுந்துமேற்குநீ
மனாதியகருவியான் மலத்தைநீக்கியே
சனாதவின்பந்தனைத் தந்ததேசிக
கனாவிலுமுன்னையே கருதற்பாலனே. (௩)

### வேறு

வேழையொதுக்கி யொருசொல்லாலானந்த
வாழ்வைப்பெருக்கி மலகன்மமாயையறப்

பாழிற்குடியேற்றிப் பரமசுகமெற்களித்தோன்
வாழிநெடுங்கால மாணக்கர்க்கருள்புரிந்தே. (௪)

பாரோரும்விண்ணோரும் பங்கயன்மாலிந்திரனு
மாராய்ந்துங்காணு தலம்வந்துளந்தளர
வாராமல்வந்தெனக்கு மாறுதபேரின்பந்
தாராமற்றந்தார்க்குத் தனுவாதிகைம்மாறே. (௫)

விம்மிதவிலக்கணம் - முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-உ௫உ.

---

## நூலருமையிலக்கணம்.

மைபபொலிமிடற்றோன்சொன்ன வாதுளாகமத்திற்சொல்லு
முப்பொருள்விளக்கத்தாலே மும்மலங்களைந்தொன்றாய்
நிற்பதம்பெறுவர்மீண்டுஞ் சென்மவாரணியங்காணார்
தற்பரஞானத்தோர்கள் சமயசாத்திரமிகழ்ந்தே. (௧)

ஆகையாலிந்தநூலுக்கதிகாரி குடும்பந்துன்ப
சாகரமெனத்துறந்து சற்குருசாமிபாத
மோகமீதூர்ந்திழுக்க முறுக்கவிழ்கமலந்தேடுந்
தாகவண்டனையனுகித் தவிப்பவன்றனேயம்ம. (௨)

வேறு.

இந்நூலைப்பருவமிலார்க் கீயற்கவீந்தக்கால்
முன்னூலைச்சூத்திரர்பான் மொழிந்தகரிசுறுகின்றாய
நன்மாலைகுரங்கறியா நலம்போலுஞானத்தைத்
துன்மார்க்கரறியாத தோற்றம்போலுந்துணிந்தே. (௩)

## வேறு.

வாழிசுயம்பிரகா சப்பெயரோன்மாணுக்கர்
வாழியெனத்தூக்கி மதிதந்தவார்கழல்கள்
வாழியொருமொழியான் மயக்கறுத்ததிருச்செவ்வாய்
வாழியருள்கொழிக்குந் திருவிதனமண்டலமே. (௬)

ஆகு திருவிருத்தம்-உருசு.

---

## பதிபசுபாசவிளக்கம்-முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.



மூன்றாவது

## சித்தாந்ததரிசனம்.



### பாயிரம்.

### விநாயகர்துதி.

சீரார்சித்தாந்த தெரிசனத்தையானோதக்
காரானைமாமுகனே கா.

அம்மையப்பனா யுயிர்க்காதார மாய் நிறைந்த
செம்மைசிவன் றாளென் சிரம். (௧)

ஒன்றாய னேகவித சத்தியா யுன்மனையாய்
நின்றாடன் பாத நினை. (௨)

சற்குருவாய் முன்னாட் சனகாதி கட்கருளு
முக்கணனை நாவே மொழி. (௩)

திருப்பா சுரத்தானற் சித்தாந்தஞ் செய்தோன்
றிருப்பாத மென்றன் சிரம். (௪)

நின்றதிருத் தாண்டகத்தா னீடுயிர்பொய்ப் போதமற
வன்றுரைத்தோன் றாளகம் வைப் பாம். (௫)

வாழ்வா வதுமாய மென்றுரைத்தோன் மாமலர்த்தா
டாழ்வாமெப் போதுந் தலை. (சு)

சிவபுரா ணத்தகவ லாலுயிரின் சிக்கறுத்தோ
னவமலர்த்தாட் சென்னிநயப் பாம். (எ)

சிவவாக்கி யதேவர் திருமொழியைக் கொண்டே
யவவாக்கி யத்தையடு வாம். (அ)

திருமூலர் மாலையெனுந் தெப்பத்தைப் பற்றிக்
கருவேலை யைக்கடப்போங் காண். (கூ)

மெய்கண்டேன் மேற்பிறவி காணேன் றிருவெண்ணை
மெய்கண்டா னூலை விழைவி. (௧0)

முன்னூலிற் சொன்னதொரு முப்பொருளை யும்விரித்திவ்
விந்நூலிற் சொல்வே னிசைத்து. (௧௧)

அவாக்கடலுள் வீழ்ந்தழுந்து மாருயிரைத் தூக்குஞ்
சிவாகமசித் தாந்தக் குறள். (௧௨)

பாயிரம் - முற்றிற்று.

---

## பதியியல்.

மதிதவழுஞ் செஞ்சடையோன் மாமலர்த்தா ளுன்னிப்
பதியியல்பைச் சொல்வாம் பணிந்து. (௧)

பதியாவ தொன்றாய்ப் பரிபூ ரணமாய்த்
திதமாகி நிற்குஞ் சிவம். (௨)

அற்றார்கட் கண்ணிதா யல்லார்க்குச் சேய்மையாய்ப்
பற்றற் றிருக்கும் பதி. (௩)

எங்குமிலை யென்பா ரிதயந் தொறுமறிவா
யெங்குமிருப் பானெம் மிறை. (ச)

உன்மனைக்குமேலா யுருவருவ மின்றாகிச்
சின்மயமாய் நிற்குஞ் சிவம். (ரு)

அசல னகளங்க னானந்த ரூபன்
சசிசேக ரன் சங்கரன். (சா)

சச்சிதா னந்தன் சதாநித்தன் சுத்தன்
மெய்ச்சருவா னந்த விம லன். (எ)

நிராமயனிற் சங்க னிராலம்பன் சோதி
பராபர னாதி பக வன். (அ)

விருப்புவெறுப்பில்லான் வேதவிதி செய்...
னெருப்புருவ னெங்கணிம லன். (கூ)

பத்தர்க்கெளியன் பதிதர்க்கறவரியன்
சித்தத்து னின்றுஞ் சிவன். (கo)

ஊனக் கண்ணார்க்கொளித்து முட்புறம்பு மொன்றாய
ஞானக்கண் ணார்க்கருள்வ னாடு. (கக)

மலரயனா யாக்கி மாலாகிக் காத்திட்
டுலைவிலா னுயொடுக்கு வான். (கஉ)

பஞ்சவதி காரத்தாற் பாகம்வரு வித்துயிரைத்
தஞ்சரணில் வைக்கு மிறை தான். (கங)

சிருட்டிதிதி சங்காரந் திரோபாவ ஞான
வருட்டிறத்தோ டைந்தொழில்க ளாம். (கச)

தேகத்தின் மூன்மூன் றிஞ் சிவன்பான் மற்றிரண்டு
மாகத்தான் செய்வா னரன். (கரு)

அவிகாரி யீச னனாதிமுத்த னென்று
விவிகார முண்டோ விறைக்கு. (கசு)

ஐவகை யசத்தியினா லைந்தொழிலு மாருயிர்க்காய்ச்
செய்யாமற் செய்யுஞ் சிவம். (கஎ)

வாளிரவி சந்நிதியின் மலரமலர்ந்து வாடிடினும்
வாளிரவிக் குண்டோ மயல். (கஅ)

ஆக்க வளித்த லழித்தன் மறைத்தலரு
ளாக்க விறைக் குண்டோ நுவல். (கசு)

அரையன் வறிதிருக்க வைந்தொழில்செய் வார்செய்
தரையன்மே லேறு மஃது. (உ0)

பரமன்வா ளாங்கிருந்து பரையைந் தொழில்செய்தும்
பரமன்மே லேறும் பழி. (உக)

ஐங்கரும சாக்கியா யப்பாலைக் கப்பாலாய்ப்
பங்கறணிற் பானெம் பரன் (உஉ)

அறிவுக் கறிவா யவிகாரி யாகி
நிறைதல் பதிநிச் சயம். (உங)

கேவலத்துங்காணக் கிடையான் கிளர்ந்தெழுந்த
காவல்சக லத்துமனு கான். (உச)

சாற்றிரண்டு மற்ற சமநிலைய சுத்தத்து
வீற்றிருப்ப னெங்கள் விமலன். (உரு)

ஆகி லவனை யறியப்ப டாவோபெண்
பாகம் பிரியாப் பரன். (உசு)

அறியாப் பொருளுமல னறிவாலுன் கண்ணு
மறியும் பொருளு மலன். (உஎ

ஆகாயம் போல வறிவாகி நிற்பானை
நீகா ணறிவாகி நின்று. (உஅ)

நீருக்குட்டப்பம்போ னின்னறிவி னின்றானைப்
பாருட்கண் கொண்டு பரிந்து. (உகூ)

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்தானை
யுள்ளுக்குட் பார்நீ யுவந்து. (௩0)

எங்கு மிருப்பானை யேகமிரண் டென்னுமை
லெங்குமாய் நீகண் டிரு. (௩க)

மோகமுறு மெத்தத்துண் மூடர்க் கிரண்டாகு
மேகமே முத்தருக்கீ சன். (௩உ)

இன்ப மயனீச னின்பம் விளைத்தலாற்
சம்புவெனும் பேருந் தகும். (௩௩)

குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப்
பருவரலை நீக்கும் பரன். (௩௪)

போக்குவர வில்லாத பூரணா னந்தர்க்குப்
போக்குவர வுண்டோ புகல் (௩௫)

ஆருயிரி னுள்ளினிருந் தாங்காங் கறிவிப்பா
ராருயிரே மேனி யவர்க்கு (௩௬)

அறிவுக் கறிவா யறிவிப்பான் சில்லோர்க்
கறிவுருவு கொண்டருளு வான். (௩எ)

பார்த்தும் பரிசித்தும் பஞ்சமலக் கொத்தையெலா
நீத்தொழிப்பா னெங்க ணிமலன். (௩அ)

பக்குவர்க்குத் தோன்றும் பயன்கொடுக்கு மற்றொழிந்த
பக்குவர்க்குத் தோன்றியுமென் பாழ். (௩கூ)

பாற்கடல்போ லாவி பலமீன்போ லாருயிர்கள்
பாற்கடலா லுண்டோ பயன். (௪0)

அருட்கண்ணூர்க் கீச னலரொளியாய் நிற்பன்
மருட்கண்ணா ருக்கிருளா மன் (௪௧)

செங்கதிரோன் கீக்துதயஞ் செய்தாலு நாட்டமிலோன்
செங்கதிரோ னில்லையெனுஞ் சீர். (௪௨)

மணவீரக்குக் காய மசையாம ணிற்பர்
சணுதவின் பத்தைத் தழீஇ. (௪௩.)

பூனை விழிக்கியுறு பொங்குமிரு ளற்றதுபோன்
ஞானவிழிக் கில்லை நவை. (௪௪)

சிதம்பரமா மெங்குஞ் செறியினுமென் ஞவி
மதமடங்கிக் காணு வகை. (௪௫)

கூடைக யறியாக் குலவுங் கதிரவனை
மூகாறி யார்சிவனை முன். (௪௬)

கண்ணிரவி யின்றிக் கலந்தறியா தொன்றையுமக்
கண்ணுங் கதிருமொன்றே காண். (௪௭)

காக்கை விழிக்குக் கருமணியொன் ருஞற்போ
லாக்கைக்குச் சாக்கி யவன். (௪௮)

அத்துவித மொன்றேயா மாங்கிரண் டின்மையெனி
லத்துவித மன்றே வஃது. (௪௯)

துவிதமிரண் டாகுமத் துவிதமொன் றாகுந்
துவிதமயல் கெட்டோய் துணி. (௫0)

அத்து விதத்துக் கருத்தம் பலவென்றுஞ்
சிற்றறிவு கொண்டுசில கீழ். (௫௧)

பதியியல் - முற்றிற்று.

## பசுவியல்.

சசிசேகரகுரவ ருடலமேற் கொண்டு
பசுவியலி னைப்பகரு வாம். (க)

பசுவென்ப தான்மாமுப் பந்தமுள்ளா னன்றே
சசிசேகரனிறைவன் றான். (உ)

கட்டியவன் றானவிழ்க்கி னல்லாற்றன் கண்ணறிவா
லெட்டுணையுந் தானவிழ்க்கா தின்று. (௩)

ஆணவத்தான் மூடமா யன்றுமுத லின்றளவும்
வீணவத்தைக் குள்ளே விழும். (௪)

இருட்டறையிற் கண்ணி லிளங்குழவி போலு
மருட்டறையி லாவி மயங்கி. (௫)

மெய்ஞ்ஞானக் கண்ணை மிகமறைப்ப வாவியர்
அஞ்ஞானக் கண்ணி லழுந்தும். (௬)

பாம்பின்வாய்ப் பட்ட பருதியைப்போ லஞ்ஞானப்
பாம்பின்வாய்ப் பட்டழுங்கும் பார். (௭)

உவர்மூடு சிந்து முமிமூடு நெற்போற்
சவியாளு மாணவத்தாற் றான். (௮)

ஈசனி ரங்கி யிணையில்கலைக் கரத்தாற்
பாச நெகிழ்த்திடலும் பண்டு. (௯)

தனுவாதி நாலைத் தழுவிவெளிப் பட்டு
நனவாதி யைந்தினை நண்ணி. (௧௰)

யானெனதென் னு மிருசெருக்கா லாருயிர்கள்
யோனிபே தத்துழலு முற்று. (௧௧)

புற்றுறு கீடங்கள் புள்விலங்கு மானிடர்கள
சொற்றேவ ரேழ்வகைத்தோற் றம். (கஉ)

அண்டசஞ்சு வேதசமுற் பீசஞ்ச ராயுசங்கள்
மண்டியதால் யோனி வகுப்பு. (கங)

எண்பத்து நான்கிலக்கம் யோனிதொறும் புக்கதுவாய்ப்
புண்பொதிபு மியாக்கை புணரும். (கச)

புல்லாய னேகவுருப்போனபினர் நல்லறகம்
புல்லாய்ப் பிறக்கவது போம். (கரு)

பூமரங்களாய்ப்பிறந்து புண்ணியனுக் கானமையாற்
போமரத்தி னூர்விறவி போல். (கசு)

புண்ணியதீர்த்தத்துட் புழுவாய்ப் பிறந்தமையாற்
பண்ணும் புழுப்பிறப்புக் காண். (கஎ)

புள்ளா யனேகவுருப் போயபினர்ப் புட்பிறவி
விள்ளுநதீ தோய விரைந்து. (கஅ)

துட்டமிரு கப்பிறப்பிற் றுதைந்து நெடுங்காலங்
கட்டப்படு மூயிரார் காண். (கக)

எல்லாவுருவு மெடுத்தெடுத்து நல்வினையா
னல்லா வுருவாகு நாடு. (உ0)

ஆனைந்து மைம்முகனுக் கபிடேக புண்ணியத்தா
லானுருவை நீங்கு மற. (உக)

ஆனுருவ நீங்குதலு மளவில்சிவ புண்ணியத்தா
மானிடரா யிங்ஙன் வரும். (உஉ)

வேதாக மம்வழங்கா மேதினியிற் போய்ப்பிறந்திட்
டாதார மின்றியலை யும். (உங)

உடம்புமுக மொவ்வா வுருவமெடுத் தப்பின்
விடம்புரையுந் தானம் விடும். (௨௪)

நல்லசிவ புண்ணியத்தா னல்லார் பயின்றேய
மெல்லவரு மாவிக்கு மெய். (௨௫)

கிடையாத வாக்கை கிடைத்துமெண்கொ லாவி
யடையாச் சிவனடி யாய்ந்து. (௨௬)

இந்தமனி தப்பிறவி கொண்டறிவை யெய்தாழ
லந்தரிக்கு மைம்புலன் களால். (௨௭)

அன்னை புலகன்னை யப்பனம்மை யப்பனென்ற
முன்னுதலை புன்ற துயிர். (௨௮)

ஒப்புக்கு வந்தாரை யுற்றார்பெற் றாரென்னுங்
கப்புவினை யான்மயங்கிக் காண். (௨௯)

மூர்தை வினையான் முகிழ்முலையா ராசையெனும்
பர்தக் கடலுட் படும். (௩௦)

என்றந்தை யென்றாய ரென்மனைவி யென்னெருக்க
லென்சாதி யென்னவியம் பும். (௩௧)

உயிர்ச்சார்வா லாவி புணர்வழிந்து காகங்
குயிற் சார்வை யொக்குங் குறி. (௩௨)

தானல்லாச் சங்கடத்தைத் தானென் றிறமாக்கு
ஞானமிலா தாய நபர். (௩௩)

எல்லாமிறந்தாலும் யானிறவே னென்றோது
கல்லாமை யாலுங் கடை. (௩௪)

பொருட்சார்வா லான்மாப் புழுங்குமெரி புக்க
கரிச்சார்வை யொத்துக் கடை. (௩௫)

சனகாதிக் கீசன் றனித்திருத்தல் கண்டு
மனை வாழ்க்கை யைத்துறவாமல். (௩௯)

நல்லாரைத் தூடித்து நவைக ளொடுத்தேரிதிப்
பொல்லாரைக் கண்டுப்ச மும் (௩௭)

ஒழுக்கமுடை யார்சொல்லை யுற்றுக்கே ளாம
விழுக்கர்மொழி கேட்கு மிசைந்து. (௩௮)

என்னுடம்பி தென்காலகை யென்வயிறீ தென விழிநா
வென்சென்னி யென ற மயங் கும். (௩௯)

ஆக்கை சடமென்று மான்மா வறிவென்று
நோக்காது நூலின் வழி. (௪0)

கன்மத்தா லாவிகறங்காய்ச் சுழன்றுழந்து
சென்மித் திறக்குந் தெரி. (௪௧)

தந்தைவிந்து வாகனமாய்த் தாயுதரத் தேயுழைந்து
பந்தப் படுமெதிபத் தும். (௪௨)

அன்னை யகட்டி லனேகதுய ரன்சொல்கே
னென்னைப் பிறவி யிது. (௪௩)

இனிப்பிறவே னீசனருள் பெற்றய்வே னென்னு
னினைப்பு மறக்கு நிலத்து. (௪௪)

பிறக்கும் பொழுதுமிகும் பேரிடும்பை பின்னுந்
துறக்க முடியாத் துயர். (௪௫)

சுகர்வாம தேவர் துறந்தாரித் துன்பை
யகன்ஞாலத் தியார்க்கு மரிது. (௪௬)

குழந்தை பருவத்து [illegible]
தழுந்தாந் துயரு[illegible] (௪௭)

காயவிளக் களித்த கண்ணுதலை யுள்ளாமன்
மாயையினை யுள்ளு மனம். (௪௮)

இல்லத் திருந்தெழிலா ரேந்திழையா லார்ப்புண்டு
புல்லிக் கிடக்கும் புயம். (௪௯)

வசும்புந் தசையு மலசங் குலமாம்
பசுந்தொடியைப் புல்லும் பசு. (௫௦)

நாற்ற விதழ்ப்புணலை நாளு முண்ணும்பின்
காற்றுணையில் வீழுங் கரைந்து. (௫௧)

இன்னணமா யாவி யிளமையினை நீத்திட்டுத்
துன்னுமுறு மூப்பைத் தொடர்ந்து (௫௨)

நல்லிளமை காலத்தி னுதனைச்சற் றுன்னாது
கொல்மூப்பா லாவிகுலையும் (௫௩)

அமுதத்தாற் கால்கழுவி யாதனத்தனுப் படவிச்
சமைத்துமிசை யேயுமுந் தனி. (௫௪)

காலபடர்க் கண்டஞ்சிக் கண்ணீர் சொரிந்தழுங்கி
யோலமிடு மந்தோ வுயிர் (௫௫)

மாசற்ற சோதி மலரடியை யுன்னுமற்
பாசத்தை யுன்னும் பசு. (௫௬)

இவ்வண்ண மான்மா லிருந்து பிறந்துழன்று
முய்வண்ண மின்றி யொதுங்கி. (௫௭)

மாலாயய னாய் மகபதியாய் வானவராய்
மேலாய வாக்கைவிர வும். (௫௮)

புண்ணியத்தான் மேலேறும் பாவத்தாற் கீழிறங்கும்
புண்ணியபா வத்தாற் புவி. (௫௯)

ஈகைதவ மின்றி யிரக்கமறி வின்சொல்லு
மேக விருக்கு மிவண். (௬0)

அபுத்திபுத்தி பூருவத்தா லாங்கிருநா லெய்திச்
சுபுத்திவரு மாவி துலங் கும். (௬௧)

மூர்த்திகள்சே வித்தத்தாந் தீர்த்தத்துண் மூழ்கியத்துஞ்
சேத்திரத்திற் சென்மித்தத் தும் (௬௨)

தெய்வஞ் சிவமென்னுஞ் சித்தமுண்டா மக்கணமே
யுய்யுநெறி யுண்டா முயிர்க்கு. (௬௩)

ஈசனடி யார்க்காணி லெனம்புருகிக் கைகுவித்து
மாசில்சரி யைக்குள் வரும். (௬௪)

சென்றாலயந்தோறுந் தீபமல கிட்டுருகி
நன்றா மலர்தொடுக்கு நாடு (௬௫)

பருப்பதங்கே தாரம் பகர்காசி காஞ்சி
திருப்பதிநற் காளத் திரி. (௬௬)

கழுக்குன் றஞ் சோணகிரி கனகசபை யோத்தூர்
செழுக்கமலை சீரொற்றி யூர். (௬௭)

விரிஞ்சிபுரந் தீர்த்தகிரி வெண்காட டிடைமருது
சிரபுரங் கோகன்னந் தினம். (௬௮)

ஈச னிருக்குமிட மெல்லாஞ் சென்றிறைஞ்சிப்
பாச மறுக்கும் பசு. (௬௯)

முன்னோன் சரிதைமுற்றி முற்கிரியை வந்தணைந்திட்
டுன்னுசுத்தி யைந்தினை யுற்று. (௭0)

மிருத்திகைலிங் கத்தின் விதிப்படியர்ச் சிக்கின்
மரித்தல் பிறப்பகற்று மால். (௭௧)

பால்வண் ணமான படிக லிங்கம் பூசிக்கின்
மால்வண்ண நீங்கு மதி. (எஉ)

மன்னும் படிகத்தின் வாணலிங்க மேயதிகம்
பன்னுசுயம் பாதலினற் பண். (எங)

மூவிலிங்கத் தும்பூசை முற்றிற் சிவனருளா
லாவியிலிங் கத்தையணை யும். (எச)

திருப்பணியி னாலுஞ் சிவபூசை யாலுங்
குருக் காரணமாகுங் குறி. (எரு)

அந்தரியா கப்பூசை யாலு மகந்தெளிந்து
சிந்திதயோ கத்திற் செலும். (எசு)

ஐயெரிநாப் பண்ணின் றனிலந்த ணையடக்கித்
துய்ய மதியமுதந் துய்த்து. (எஎ)

ஆதார மாறுங்கண் டப்பாற் பரவெளியி
னாதாந்த வின்பத்தை நாடி. (எஅ)

ஊனமிலா யோகத்தைச் சென்ற னுழக்கியொரீஇ
ஞானத்தைத் தாவுமுயிர் நாடு. (எகூ)

ஈச னருணூலே யெஞ்ஞான்று காண்பமெனு
மாசை பெருகு மற. (அ0)

வினையொப்பு பாகம் வியன்சத்தி பாதந்
தனையெய்து மெய்துந் தரம். (அக)

துறவு மவாவித் துயரும் பிறப்பி
னுறவு மருட்பாலு முறும். (அஉ)

பிறவாமை கள்ளாமை பேணிவெகு ளாமை
மறவாமை மற்றுமரு வும். (அங)

கொல்லாமை தின்னாமை கோள்குறளை சூத்திரங்கள்
சொல்லாமை யாவுந் தொடும். (அச)

பாசவெறுப்பும் பரவிருப்பும் வந்தவுயி
ராசாலல் முத்தியடை யும். (அரு)

தந்தைதமர் மேல்வெறுப்புஞ் சங்கரன்றன் மேல்விருப்புஞ்
சிந்தையிடை வந்துதிக மும். (அசு)

அத்திகழ்வா லீச னருளுருவு கொண்டருளி
முத்தியடை விப்பன் முறை. (அஎ)

பசுவியல் - முற்றிற்று.

---

## பாசவியல்.

பாசவிய லைந்து பகுப்பா யிருக்குமதை
யீசனருள் கொண்டியம்பு வாம். (க)

மலமாயை கன்மமா மாயைதிரோ தாயி
குலமொன்று வேறுங் குணம். (உ)

பாசமறி யாமை பகராண வம்விச்சை
மூசுபெத்த மூல மலம். (ங)

அனேகவித சத்தியினா லாருயிரை மூடுந்
தினகரனைப் பன்னகம்போற் சென்று. (ச)

அன்னியத்தைக் காட்டி யனன்னியத்தைத் தான்மறைக்கு
மென்னே மலத்தி னியல். (ரு)

தண்டுலத்தைச் சில்லுமியுந் தாம்பிரத்தைக் காளிதமு
மண்டுதல்போ லாவிமறைக் கும். (சு)

ஆனை யுலாவு மடவியைப்போ லாருயிராங்
கானிலுலாவு மலங் காண். (எ)

கிஞ்சிக் கியன்மூடன் கேடன் கொடும்பாவி
வஞ்சனித ஞல்வர் தது. (அ)

பாசன் பெரும்படிறன் பாமரன்றீப ராங்காா
மாசனித ஞல்வர் தது. (கூ)

கன்மவிருப்புங் களேபரத்தில் வாஞ்சனையுங்
குன்மமலத் தின்றீக் குணம். (கo)

இச்சைவழி சென்றங் கிருவினையை யீட்டிவரல்
கொச்சைமலத்தின் குணம். (கக)

தாட்டுணைக்கீழ் நின்றபினுஞ் சாதிபா ராட்ட லிந்தக்
கோட்ட மலத்தின் குணம். (கஉ)

ஈச னகத்திருக்க வில்லையெனக் கூறலிந்தக்
கூசு மலத்தின் குணம். (கங)

ஆசையுறுங் காலமெலா மாலிங் கனஞ்செய்யு
மாசு மலமா மகள். (கச)

உலகந் தெரியா துபத்தத் தடக்குங்
கலகமலக் கன்னி கை. (கரு)

உண்ண லுறங்க லுயிர்க்கும் பொழுதெல்லா-
மெண்ணைப் பிரியா ளிவள். (கசு)

களமமகப் பெற்றதின்பாற் காயமெனும் பேரனையுஞ்
சென்மிக்கப் பண்ணுந் திரு. (கஎ)

அந்தோ மலத்துயிர மாற்றகிலே ஞற்றகிலே
னெந்தா யிரங்கா யினி. (கஅ)

கலையாங் கரத்தாலிக் கட்டவிழ்த்தாற் றீதோ
வலரோ வடியேற் கருள். (௧௯)

ஈச னருளுதய காலத் திறக்குமிது
பேசுவா மாயைப் பெயர். (௨0)

மாயை சடமயக்க மதந்திர மதம்பொய்ம்மை
காயம் விளக்குக் கரு. (௨௧)

மூலை யிருந்தாரை மூத்தத்தில் விட்டதன்றிச்
சாலப் பெருமயக்கந் தான். (௨௨)

பிருதிவியப் புத்தேயு பெருமருத்து வானம்
பொறிபுலன் கன்மேந் திரியம். (௨௩)

மனம்புத்தி யாங்கார மாறுந சித்த
மினமான்ம தத்துவமென் றெண். (௨௪)

காலநியதி கலைவித்தை ராகமொடு
மாலும் புருடன்மா யை. (௨௫)

மூன்றான்ம தத்துவமும் பின்வித்யா தத்துவமுஞ்
சின்மாயை யார்தந் திரம். (௨௬)

சுத்தவித்தை யீச்சுரம்பின் சொல்லுஞ் சாதாக்கியங்கள்
சத்திசிவ மைந்துந் தனி. (௨௭)

சிவதத் துவமிதனுற் சேட்டிக்கு மெல்லா
மிவைதந்த மாமாயை யெண். (௨௮)

ஆருறக் குள்ளா யகப்பட்டுயிர்சுழலு
மாறுப் பிரானை மறந்து. (௨௯)

மயிரெலும்பு தோனரம்பு மன்னுதசையைந்துஞ்
செயிர்புவியின் கூறென்று தேர். (௩0)

ஓடும் புனலுதிர மொண்ணக் கிலமூளை
கூடுமச்சை யப்புவின் கூறு. (௧௧)

ஆகாரந் தூக்கம் பயமை துனஞ்சோம்பு
நீகாணெ ருப்பின் கூறு. (௧௨)

ஓட்ட நடைகிடத்த லுற்றிருத்த னிற்றலைந் துங்
கூட்டனிலன் கூறென்று கொள். (௧௩)

காமங் குரோதங் கழிலோப மோகமதஞ்
சேமவிசும் பின்கூறு தேர். (௧௪)

வாயுமொரு பத்து மலிநாடி யோர்பத்து
மோயகுண மூன்றக மூன்று. (௧௫)

வசனாதி யைந்தும்பின் வாக்காதி நான்கு
மிசையுந்தொண் ணூற்றாறு மெண். (௧௬)

இதற்குள்ளாயாவி யிறந்து பிறந்தே யுழலு
மதுக்கொன்றை யானை மறந்து. (௧௭)

காய்விளக்களித்த கண்ணுதலை நண்ணி லிந்த
மாயைப் படலமறை யும். (௧௮)

நனவின்மூப் பானைந்து நற்கனவி லையைந்து
மூனை சுழுத்தி யிற்கருவி மூன்று. (௧௯)

துரியத்திரண் டாகுந் துரியாதீ தத்திற்
கருவியொன்றா மைந்தவத்தை காண். (௪௦)

அந்தரங்கத் துள்ளிருந் தரையர்புறம் போதல்போ
லந்தரங்கத் துள்ளாவி யும். (௪௧)

ஆணவத் தான்மூடுண்டு மாயையாற் கிஞ்சிஞனும்
பூணும்வினை யாற்புருட னும். (௪௨)

குருவையெதிர் தூடித்தல் குற்றமெடுத் தோதல்
குருக்கொல்லன் மாயா குணம். (சு௫)

பற்றற்றார் கண்ணும் பருவரலைச் செய்வித்தல்
குற்றமிகு மாயா குணம். (சு௬)

ஈசனிலை யாவியிலை யீசனடி யாரில்லை
மாசகலா மாயா மகற்கு. (சு௭)

நூலில்லை கேள்வியில்லை நுண்ணறிவு மில்லையால்
மாலகலா மாயா மகற்கு. (சு௮)

ஞானமிலைப் பத்தியிலை நல்லார்கண் ணட்புமிலை
மானமிலை மாயா மகற்கு. (சு௯)

முன்னவன்பா தாம்புயத்தின் முற்று மெனையடைக்கா
தன்னை வயிற்றிலடைக் கும். (சு௮)

மாயை விளக்கவியா தவியமா தேவனருண்
மேய வெயின் முகிழ்க்கு மோ. (சு௯)

மாயா புரமெரித்த மதிசேக ரர்க்கின்றென்
மாயாபு ரம்வலிதோ மற்று. (௭0)

இம்மாயை நட்ட மெழிற்சோகம் பாவனையாற்
கன்மமலக் கட்டுரைப்பேன் காண். (௭௧)

கன்மம் வியாபி கீடம்போற் சடமன்று
சென்மிக்கப் பண்ணுஞ் செயல். (௭௨)

வல்வினையாற் தாயகட்டில் வந்து பிறந்தனவால்
நல்வினையுந் தீவினையு நாடு. (௭௩)

நல்வினையாற் புண்ணியமு நவிறீதாற் றீவினையுந்
தொல்லை வினைக்கேற்பத் தொடும். (௭௪)

முற்சொன்ன ஆழ்வினையான் முடியா விகாரமுறு
முற்சாக நன்முயற்சி யுற்று. (ருகூ)

முயற்சியா லீசனேயும் பின்னிட்டு முந்திப்
பயிர்செய்யு மூழ்வினையின் பால். (ருசு)

ஊழ்வினையாற் சஞ்சிதமு மூலவில்பிரா ரத்தமுமேல்
வீழுமா காமியமு மே. (ருஎ)

விருப்பும் வெறுப்புமாய் வேண்டல்வேண் டாமை
மரிப்போ டுதிப்பும் வரும். (ருஅ)

கறங்குவரி கொள்ளிவட்டங் கடிதிற் சுழல்வண்
டுறங்குலா லன்றிகிரி யொப்பு (ருகூ)

மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றவத்தை மூன்றுதுக்க
மூன்று பிராரத்த மொழி. (சு0)

காமம் வெகுளி மயக்கமிவை மூன்றும்
வாமச் சமையத்தார் மாட்டு. (சுக)

சாத்துவிதஞான்ஞ் சமநிலைய மற்றிரண்டுஞ்
சாற்றி லிருளொளியுந் தான். (சுஉ)

சாக்கிரமுஞ் சொப்பனமுந் தணவாச் சுழுத்தியையும்
போக்கிற் றுரியம் பொருள். (சுங)

ஆன்மீகம் பௌதீக மறையுந் தெய்வீகமிவை
யான்மாவுக் கில்லை யறி. (சுச)

முன்னைவினைப் பின்னைவினை மூவர் கிசமூழ்வினை
புன்னை யணுகாமை யோர். (சுரு)

இச்சையனிச்சைபரவிச்சை யிம்மூன்று
னிச்சஞ் சுழலு முயிர் நின்று. (சுசு)

தன்னிச்சை யால்வருத லனிச்சை யாதுறத
லன்னியரால் வந்தடைத லாம். (௬௭)

ஆன்மீகந் தெய்வீக மான பவுதிகந்
தான்மேவு மான்மாத் தனித்து. (௬௮)

மன்னவராற் கள்வரான் மாவானு றுபிணியா
லின்னலுற லான்மீக மென். (௬௯)

தாயகட்டிற் றங்க றரணிதனில் வநதழித
லாயிற் றெய்வீக மெனலாம். (௭௦)

வானி லிடியான் மழையான்மற் றச்சடத்தா
லூனமுறல் பௌதிகமா யோர். (௭௧)

சஞ்சிதமுன் கட்டுவினை சற்குருநோக் காற்சரியும்
பஞ்சுமலை பட்ட நெருப்பாய் (௭௨)

உள்ளப் பொசிப்பெல்லா முண்டொழிப்ப தன்றியிதைத்
தள்ளப் படாதெவர்க்குந் தான். (௭௩)

கொடுப்பானு மீசனதைக் கொள்வானு மீசனெனின்
மடுக்காதெதிர் வினைகள் வந்து. (௭௪)

ஞானபுலிவாழ்காட்டி னள்ளிரலை வாழுமோ
தானசிப்ப தல்லாற் றரித்து. (௭௫)

வறுத்த விதையுண்ப தன்றிமா நிலத்தைக்கின்று
செறித்துவிளைப் பாரோ தெளி. (௭௬)

வெறுப்புவிருப் பாற்பிறப்பா மேலைக்கிப் போதே
வெறுப்புவிருப் பற்றால் விடும். (௭௭)

கூத்தியைப்போற் பாவங் குலக்கொடிபோற் புண்ணியங்க
ணீத்தார்க் கிரண்டு நெருப்பு. (௭௮)

நாடுவினை யொப்புவந்த நாதாந்த யோகருக்கிங்
கோடுந் திரவியமு மொன்று. (எக)

இருவினை யொப்புற்ற வுயிரிதயத் தானந்
திருவம் பலமிறைக்குத் தேர். (அ0)

நற்சாதி துர்ச்சாதி நல்லாயுத் தீயாயு
நற்போகந் துர்ப்போக நாடு. (அக)

நல்வினையா னாகம்போந் தீவினையாற் றீநிரயஞ்
செல்லு முயிரென் செயும். (அஉ)

நல்லன்சிறு புல்ல னபுஞ்சன் விதுரனெனத்
தொல்கருமத் தார்தந் தொழில். (அங)

உன்ன லொருகால்பின் னுரைத்தலிரு காலகனைத்
துன்னன்முக்கா லொன்றே தொழில். (அச)

இன்னவகை யெவ்வுயிர்க்கு மேறுயிரு வினைய
முன்ன லொருக்கிலொழி யும் (அரு)

சற்கன்மத் தாமேல தனுவைநா னென்றுவருந்
துர்க்கன்ம மெல்லாந் தொலை. (அசு)

இக்கன்மத் தாற்றுயர மென்சொல்கே னென்சொல்கேன்
முக்கண்ண நீயே முகிழ். (அஎ)

கன்ம வெயிலகற்றிக் காற்கமல நீழலின்க
ணென்னை யிருத்தா யினி. (அஅ)

அவிகாரி யீச னருளுதய காலஞ்
சவிமாளுங் கன்மமலந் தான். (அகூ)

ஓமாதி வாக்கியமாீ புயிரறிவுக் கூடியமா
மாமாயை தன்னைவருப் பாம். (கூ0)

வேதாக மங்கலைகள் விஞ்ஞானர் மாலாதி
காதர்க் குடலாதி நாடு. (௯௧)

எண்பத் தொருபதமு மேழ்கோடி மாமனுவு
மைம்பத்தோ ரக்கரமு மாம். (௯௨)

சரிதாதி மூவர்க்குச் சாலோக மாதி
விரிபதமூன் ருகியுமே வும். (௯௩)

இரவிலெழு சந்திரன்போ லென்றாழ்வரு மளவும்
விரியபர ஞானமாம் விந்து. (௯௪)

இந்தவிந்து ஞானமின்றே லெவ்வுயிர்க்கு மெஞ்ஞான்றும்
பந்தமுத்தி யில்லையாம் பார். (௯௫)

சிவஞான சூரியன்முற் சீவமதிப் பல்கருவி
யவஞான மீனு மறும். (௯௬)

சனகாதி கட்கன்று சாற்றபரம் பொன்ற
வுஞ்தபரஞ் சொன்னவனே யுற்று. (௯௭)

அபர வுணர்வை யறவகற்றி யென்பாற்
சுபரம் வருமாறு சொல். (௯௮)

மாமாயை யீசனருள் மாறுதெதிர்ந் தன்றிப்
போமாறு முண்டோ புகல். (௯௯)

மறைப்புருவ மாபறிவின் மாறுசெயும் பொல்லாச்
சிறப்புமலஞ் சொல்வார் தெரிந்து. (௧00)

அன்னை யருட்சத்தி யாவிமலம் பொன்றப்
பின்னைத் திரோதானப் பேர். (௧0௧)

இருவினையொப் பாவிக் கெய்தளவுஞ் செய்யுந்
திரைமயக்க மாறித் தினம். (௧0௨)

மடித்துயிரின் வல்வினையை மாளுதருந்தி
யடித்துப் பாலூட்டு மருள். (கoசு)

செகத்தை மறைத்துச் சிவங்காட்டிப் பின்ன
ரகத்தை மறையா தருள். (கoச)

மலமொழிந்த காலத்து மாறுந்தி ரோதை
சலமில் சிவஞானத் தாய். (கoரு)

அச்சோ நெடுங்கால மாவிதிகைத் தெய்த்தலேந்தே
னற்சோம சேகரனே நான். (கoசு)

பஞ்சமலத் தாவிடுக்கண் பட்டுயிர்க ளொஞ்ஞான்று
நஞ்சணிகண் டத்தனை நாடா. (கoஎ)

கோடிசிவ புண்ணியத்தாற் குவியி மனம்பின்னர்
நாடுஞ் சிவனை நனி. (கoஅ)

பாசவியல்-முற்றிற்று.

## பாசமோசனவியல்.

சிவஞான தீக்கையினாற் றிணிமலந்தீர்ந் தாவி
சிவமாதல் சொல்வார் தெரித்து. (க)

அஞ்சு மலத்தாலு மாவிபடுந் துயரம்
வஞ்சிபங்கன் றீக்கையின்மா யும். (உ)

மீன்போற்றிரு நோக்கால் விமல னுருவாக்குந்
தான்போக்கி நின்ற தரம். (ங)

ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமாற்
காமாதி நீத்தவரைக் காண். (ச)

கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறத்தானு
மாழிவிட முண்ட வரன். (௫)

திருநோக்கான் மூலமலந் தீயும் பரிசத்தா
லிருண் மாயைக் கூட்டமிரி யும். (௬)

திருமொழியாம் கன்மமலஞ் சிந்துந் தியானத்தாற்
பெருமாயை போயொழியும் பின். (௭)

சிவநூலா றொன்றுந் திரோதையப்பா லாவிச்
சிவதீக்கை யாலாஞ் சிவம். (௮)

பசைநீங்கு மாருயிர்க்குப் பரமசிவன் சொன்ன
தசகாரிய முறைவன் றான். (௯)

கருவிசட மென்றவற்றின் கன்மத்தைக் காண்டல்
கருவிக் குருவமெனக் காண். (௧௦)

தத்துவத்தா னுமறியோஞ் சாட்சிமைக் கொண்டறிந்
துற்றுணர்தல் காட்சியா யுன். (௧௧)

பாசக் குழுக்குப் பதிநா மெனத்துறத்தல்
பாசசுத்தி யென்னப் படும். (௧௨)

சைதன் னியவுருநா னென்று தமநீங்கல்
சைதன்னிய னுருவந் தான். (௧௩)

எனைவிடவே றில்லையியானே பரப்பிரம
மெனவுணர்த றற்றெரி சனம். (௧௪)

சீவனுக்குச் சாக்கி சிவமென் றுணர்தலே
சீவனுக்குச் சுத்தியெனத் தேர். (௧௫)

சிவனன்றி யாருயிர்க்குச் சேட்டையிலை யென்னில்
சிவரூப நன்றாய்த் தெளி. (௧௬)

எவ்வுயிர்க்கும் போத மிறையென் றறிதலே
செவ்வே சிவதரி சனம். (௧௭)

அந்தச் சிவாம்மை யன்றியிலை யென்றோர்த
லூர்துஞ் சிவயோக மோர். (௧௮)

உவனிவனென் றன்றதங் கொன்றாகிப் போதல்
சிவயோக மென்றே தெளி. (௧௯)

பத்துவித காரியத்தா லீரவி பசையற்று
முத்தியிடை நிற்க முறை. (௨௦)

பத்தைவிட வுண்டோ பரமபத மாருயாக்குச்
சித்தைவிட வுண்டோ செயல். (௨௧)

ஈரைந்து காரியத்தா லிச்சையறு மாருயிர்க
டாரமிழர் தானைத் தக. (௨௨)

உள்ளமொடுங்கி யுரையொடுங்கி யானந்த
வெள்ளத் தழுந்திநிற்கு மேல். (௨௩)

பெத்தத்தை நீங்கிப் பிராணே டிரண்டற்று
முத்தத்தி னிற்கு முதல். (௨௪)

ஐந்தடக்கி யாறொடுக்கி யம்பரம்போ லொன்றாகிச்
சந்தற்று நிற்குமுயிர் தான். (௨௫)

விமரிசஞா னத்தால் வெறுப்புவிருப் பற்றுச்
சமரசத்தை யெய்துந் தனி. (௨௬)

கண்ணு முயிர்களெல்லாங் காசத்தை மோசித்து
விண்கதிரோ டொன்றாய் விடும். (௨௭)

அறிவி லறிவை யறியா தறிந்து
குறியிறந்து நிற்குங் குலம். (௨௮)

ஐந்தவத்தை சென்றாலு மாவரண மற்றதவர்
சிந்தைசிவன் பாலே தெளி. (௨௯)

ஆமயத்தை நீங்கி நிராமயத்தை யாதரிக்கி
னாமயம்போ நீயே யவன். (௩௦)

பின்னபின மாய்நோக்கும் பேசிற் கடையிடைக
டன்னையே நோக்குந் தலை. (௩௧)

அவயவமோ நிரவயமோ வான்மா வறியேன்
புவனகுரு நாதா புகல். (௩௨)

உணருமுயி ரில்லை யுடம்பே யுயிரொன்
றுணர்வ னுலோகா யுதன். (௩௩)

நான்பருத்தே னிளைத்தே னென்றுரைக்கு ஞானத்த
னூன்சடல மன்றே யுயிர். (௩௪)

ஊமனொளி யில்லையெனி லொப்புவரோவத்தன்மை
யேமவுயி ரின்றென்பா ரில். (௩௫)

உள்ளே யிருந்த வுயிர்போன தென்றுலகஞ்
சொல்லுவதென் சொல்லோநீ சொல். (௩௬)

அவயவமே காய நிரவயமே யான்மா
வவயவமே தோன்றியழி யும். (௩௭)

கட்டை யடுக்கிக் களேபரத்தை மீதடுக்கிச்
சுட்டிடுவ தென்சொல்லோ சொல். (௩௮)

உடல்கிடக்க வாவி யோடியதென் றியாருங்
கடல்போற் கதறுவதென் காண். (௩௯)

மூட வுடலுயிரோ மூடா விதென்கொலுயிர்
கூடாமோ பக்கிக் குலம். (௪௦)

உணர்ச்சியுயி ரில்லையோ வென்றுரைக்குஞ் சொல்லை
யுணராயுலகா யுதா. (௪௧)

ஆக்கையகத் துள்ளோநல் லான்மா வுளதென்று
தூக்கிமறை சொல்லுந் துணி. (௪௨)

இந்தியமே யான்மாவென் றெண்ணு மறிவில்லா
மந்தச் சவலை மதம். (௪௩)

சத்தம் பரிச முருவரச கெந்தத்தை
யுப்த்தறிவான் சீவனென வோர். (௪௪)

இந்திரியத்துக் கெல்லா மிறைவ னுயிரன்றி
யிந்திரியத்துக் குண்டோ விறை. (௪௫)

ஒன்றறிந்த தொன்றறியா தாலு முயிரல்லை
மன்றலன்றி மூக்கறியா மற்று. (௪௬)

கண்ணுருவ மன்றியொன்றைக் காணறியாக் கையார
வுண்ணலன்றி நாக்கறியா தோர். (௪௭)

காதொலியை யன்றியொன்றைக் காணறியா விவ்வுடம்பு
மோது பரிசமன்றி யுற்று. (௪௮)

ஆசையா லைந்தறிவைக் கொண்டறிவ தான்மாவென்
றோசையொடுஞ் சொல்லுமறை யோர். (௪௯)

செல்லும் பிராணனன்றிச் சீவனிலை யென்றுணர்ந்து
சொல்லுஞ் சுவாசமதஞ் சூழ். (௫0)

மூக்குறுநன் மூக்கணியை மூடச் சுழுத்தியினிற்
போக்கடித்த தாமோ பொருள். (௫௧)

பிராணனை முன்விட்டுப் பிடிப்போன் பிராணனென
வராவணியான் வேதமறையும். (௫௨)

மனமே புருடனன்றி மற்றில்லையென் றோதுங்
கனமாயா வாதிமதங் காண். (௫௧)

என்மனத்தா லியானொன்றே னென்றுரைக்கப் பட்டமையாற்
றன்மனந்தா னன்று தனி (௫௨)

புத்தியே யான்மாவா மென்றுணராப் போதித்த
புத்திகெட்ட புத்தன்மதம் பொய். (௫௩)

புத்திக்குச் சாக்கியாம் போதமய வான்மா
புத்திசட மாதலினாற் பொய் (௫௪)

ஆங்கார மான்மாவா மென்றுரைக்கும் பேரிருளா
ராங்கார வூதமறி. (௫௭)

சடஞ்சித்தத் தாலறியுஞ் சைதனிய னன்றென்
றிடமறைக ளோது மெடுத்து. (௫௮)

சித்தமயமான னென்றுணரேல் சீர்சான்ற
சித்தர்மதம் பின்னிட்டுச் செல். (௫௯)

சைதனியன் சந்நிதியிற் றானறியுங் கிஞ்சிக்கியன்
சைதனிய னுக்குச் சடம். (௬0)

காயமுதற் சித்தங் கடையாமிவை கட்குச்
சேயன்மை தன்னிய சீவன். (௬௧)

சீவனத்தாற் சீவனென்னல் சீவமிறந்தா லிந்தச்
சீவனே யந்தச் சிவம். (௬௨)

தன்னைக் கண்டாங்குத் தலைவனையு முன்னோது
முன்னைப் பிரமமெனு மோர். (௬௩)

ஊனையொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமென நாடு. (௬௪)

சொப்பனமுஞ் சாக்கிரமுந் தொலையொத் தகாலத்துச்
சுப்பிரம மென்றுநீ சொல். (௬௫).

நான்பிரம மென்னு நடைமலையைச் சிவைபாகன்
றானடக்கி யாட்கொள்வான் றான். (௬௬).

நீபிரமமென்று நெடுநாட் பிறந்திறந்தாய்
மாபிரம மென்னை மறந்து. (௬௭).

ஆதிமுத்தன் சீவ னநாதிமுத்த னீசனென
வேதமுறை செய்யும் விரித்து. (௬௮).

உள்ள மசையா துயர்குருவன் போனிற்கில்
வள்ளலுரு வாறுய் மதி. (௬௯).

சித்திரத்தை யொத்துச் சிவோகமெனச் சிந்தித்தா
லத்தனுரு நீயாவை யால். (௭0)

இந்நிலையி னிற்பரிதே யெல்லாஞ் சிவமென்னு
மந்நிலையி னிற்பா யற. (௭௧).

அஃதுமரி தேயாகி லஞ்செழுத்தி னுண்மைப்
பகுதியறிந் துள்ளே படி. (௭௨).

சொன்ன நிலைக்குட் டுதையா மனமாயின்
முன்னூலை யோதி முயல். (௭௩).

சாத்திரத்தை யோதச் சழக்கு மனமாகி
லார்த்தகுரு நாதனைநீ புன். (௭௪).

குருவுருவ முன்னக் கோதகன்றிட் டாவி
பரிபூரணத்துட் படும். (௭௫).

பாசமோசனவியல் - முற்றிற்று.

## சிவயோகவியல்.



அவயோகத் தன்மை யகற்றியலை வில்லாச்
சிவயோகத் தன்மை தெரிப் பாம். (௧)

நதிபாங்கர்ப் பன்னகத்தி னண்ணிப்பத் மாசனத்தில்
வதியாக் குருவை வணங்கி. (௨)

நீர்க்குமிழி யின்னற்கு முண்டுநிலையில்லை
யாக்கைக்கென் றெண்ணி யறிந்து. (௩)

முன்னோ னுரைத்த மொழிநிறுவிப் பற்பலவாம்
பின்னமொழி யெல்லாம் பிரித்து. (௪)

சிவத்தோமசி யுண்ணி னைந்து சிவயோக நிட்டை
சவுக்கியதானத்தேறித் தான். (௫)

அவிரோத வாளா லகங்கரத்தை யட்டிப்
பவரோகத் துக்குப் பயந்து. (௬)

அல்லல் விளைக்கு மவாமனத் தின்வேரை
யொல்லை யகழ்ந்திட் டொரீஇ. (௭)

அகாயனவி காரி யனந்தவா ளந்தன்
மகாதேவன் றன்னை மதித்து. (௮)

பதைத்தெழு முள்ளப் பதைப்பைப் பறித்து
மதத்தை யொடுக்கி மறித்து. (௯)

தத்துவத்தைப் பின்னிட்டுச் சகசமல கேவலத்தை
யத்தனருள் கொண்டாங் ககன்று. (௧0)

அமுசோகம் பாவனையை யண்ணியறி வாகிச்
சமுசயத்தீப் பாவனையைத் தள்ளி. (௧௧)

சிவன்வே ருண்ட சிவன்வேறென் றெண்ணுமயற்
பாவனைக்கண் ணுள்ளில் படா. (௧௨)

நதியோடிப் புக்கழுந்து நாட்டம்போ னின்ற
பதியிற் கலந்து பழகு. (௧௩)

அதுவுதுவென் றெண்ணு தறிவோடறிவாய்ப்
பதிதல் சிவயோகம் பார். (௧௪)

ஒன்றென் றிரண்டென்று மூன்று துறங்கியே
யொன்றாத லேசிவயோ கம். (௧௫)

சாத்திரத்தை யுன்னிற் சமாதி குலையு மெனி
னேத்திரத்தும் பாரே னிலத்து. (௧௬)

நவிதநா தங்க ணனிதோன்று மாயின்
சிவனருளைக் கொண்டு செகு. (௧௭)

சுட்டி லசத்தா நீ சுட்டைப் பிறகிட்டுச்
சுட்டாமற் சுட்டித் தொடர். (௧௮)

ஒளியி லொளியா யொடுங்கி யுருகில்
வெளியில் வெளியாய் விடும். (௧௯)

குறியாக் குறியைக் குறித்துணரப் போகும்
குறியே பிறவிக் குறி. (௨0)

மான்குறிக்கும் வேடனவண் மன்னன் வரவறியா
மான்றாய் நின்றதை மாலும். (௨௧)

ஆகாயப் புள்ளறியா வண்டத்தைப் பொய்ச் சார்வை
யோகானு சாரி யுணரார். (௨௨)

அம்புவிழு மந்நேர மாக்கறக்குஞ் சில்காலஞ்
சம்புவின்யோ கத்திற் றரி. (௨௩)

உழுவையரி மாவானை யுரகங் கரடி
தொழும்யோகி தன்னைத் தொடர்ந்து. (௨௪)

திடர்சுகங்க ளெல்லாஞ் சிவனேந்திக் கொள்ளு
மடர்வதிலை யொன்று மதுரை. (௨௫)

இந்திரனுஞ் சோதித் திடுக்கணுறு வானீத்த
பந்தச் சிவயோகர் பால். (௨௬)

வண்ணப்பயோதரத்து மணியல்குற் பூந்தடத்துங்
கண்ணைக்கொ டாரியோகர் காண். (௨௭)

செத்தசத்தின் கண்ணுமொரு சித்திரத்தி னற்கண்ணு
மொத்திருக்கும் யோகியுயர் கண். (௨௮)

பழிமுனையைக் காட்டுகின்ற பல்லுலகை நோக்காச்
சுழிமுனையை நோக்கித் தொடும். (௨௯)

கண்ணியதீம் பாலைக் கமரிற் கவிழ்த்தற்றே
பண்ணுங் கருமம் படில். (௩௦)

அசையாச் சிவயோகத் தானந்த மீதூர்ந்
தசையா வுளமாதி யாங்கு. (௩௧)

அலையற்ற சாகரமோ வவிழ்ந்த கயிற்றூசலோ
வலைவற்ற யோகி யகம். (௩௨)

பல்லூழி யேகரிமைப்பாய்ப் பண்ணுங்கொ லோவெதிர்ந்த
தொல்லூழை வென்ற சுகம். (௩௩)

சாற்சக் திரனோ தடையற்ற வானோ
வரச்சந்த யோகர் மனம். (௩௪)

பொன்னுக்கை கிட்டியுமென் யோகப் புணர்ப்பிலையே
லென்னும் பிறந்து மிலன். (௩௫)

ஊர்ச்சுணங்க னைப்போன்றிங் குண்டிக் கலையோகர்
பார்க்கக் கிடையாப் பரம். (௩௬)

வேணி யழகும் விபூதியுடைப் பூணழகும்
பாணர்க் கிருந்தென் பயன். (௩௭)

வேடப் பொலிவிருந்தென் வேசிபர்போ லோடோது
நீடுசிவ யோகமி னீசர். (௩௮)

துறந்துஞ் சிவயோகந் துன்னாத மூடர்
பிறந்தும் பிறவா தவர். (௩௯)

தண்டிகையுங் கொம்புந் தவசிக் கிவையடா
வம்பர்க்கு வைத்த வழி. (௪0)

உண்டி புசிக்கவோ யோக முணர்ந்தவோ
வண்டர்பிரான் றந்தனைக் கை. (௪௧)

ஊழைத் துறந்தா லுலகைத் துறப்பையன்றி
யூழிருக்க நீதுறவி யோ. (௪௨)

வல்லியத்தோல் போர்த்தா வயன்மேயு மாபோல
புல்லர்க்கும் யோகம் பொது. (௪௩)

அணுவுக் கணுவா யகண்டமாய் நின்ற
பணிசெய்ய நீயே பணி. (௪௪)

எங்குமாய் நின்றானை யெக்காலும் பூசித்தே
யெங்குமாய் நிற்கவெணக் கீ. (௪௫)

ஆக இயல் ஐந்துக்குக் குறள் - ௩௭௮.

சித்தாந்ததரிசனம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.



## நான்காவது

## உபதேசமாலை.



### கடவுள் வணக்கம்.

சீர்கொண்ட வெள்ளுடைய சிந்தைக் கயிலாயத்
தேர்கொண் டிருந்தாடு மெந்தையே - பேர்கொண்ட
பொன்னம்ப லத்தினிலும் பொற்கொடியோ டெஞ்ஞான்று
மின்னம் பலபதியி னும். (௧)

எண்கணனைக் குட்டியக்குட் டெங்கேனும் பட்டதோ
மங்கையரி மேலடித்த மத்தடிபோ - லெங்கேனும்
பட்டதோ வெங்கள் பசுபதிமேற் பட்டவடி
பட்டதே யெவ்வுயிர்க்கும் பார். (௨)

### தக்ஷிணாமூர்த்திவணக்கம்.

சிவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தா - லோவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தி லேந்தியவெம் மான். (௩)

### குருத்துதி.

சனகர் சனற்குமார் சனந்தரர் சனந்தர்
முனிவரர்க்கு ஞான மொழிந்த - முனைவனே

யென்போல வந்திங்கே யென்னை யெனக்குமறை
பொன்போலத் தந்தார் பொருள். (ச)

சாக்கிரத்துஞ் சொப்பனத்துந் தண்டாச் சுழுத்தியினு
நீக்கமற நின்றருகு மென்றன்னைத் - தூக்கி
மடியாத் துரியநிலை மாமணிமன் றத்திற்
குடியாக வைத்தா னெங்கோ. (ரு)

## நூற்பெயர்.

கலியுலகத் துக்கேற்பக் கற்பனை யாண்மார்தர்
பலபலகற் பித்ததெல்லாம் பாரா - துலகமெனு
மாலை யரிக்க மருந்தா முபதேச
மாலையினைப் பார்மாண வா. (சு)

## ஆசிரியனைத்தேடிக்காண்டல்

நாடுகக ராலயங்கள் நாகமுழை யெங்கெங்குந்
தேடியுள னைந்து திகைத்தலறி - மாடிலர்கள்
வைத்துப் புதைத்திருந்த மாநிதியைக் கண்டாற்போ
லுத்தமனே கண்டே னுனை. (எ)

## மாணனைக்கண்டுமகிழ்தல்.

என்று பருவமுனக் கெய்துமோ வென்றுநா
னன்றமுத லின்றளவு மாசித்தேன் - றுன்றா...
லிப்பிறப்பி னுடிநா னென்னை நீ மாணவக
வெப்பிறப்பு நாடினேன் யான். (அ)

## வேண்டுகோடல்.

செம்புண்ணில் வேனுழைந்த தென்னச் செகமாய
வைம்புலனுக் கஞ்சி யடைந்தேனைச் - செம்பதுமத்

